

தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

# ஆகஸ்ட் 1981

மலர் 12
இதழ் 3

*சிறப்பாசிரியர் :*
**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத்,**
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.

## உள்ளுறை

பக்கம்



दधिमथननिनादैस्त्यक्तनिद्रः प्रभाते
निभृतपदमगारं वल्लवीनां प्रविष्टः ।
मुखकमलसमीरैराशु निर्वाप्य दीपान्
कबलितनवनीतः पातु गोपालबालः ॥

*ததிமதநநிநாதைஸ்த்யக்தநித்ர: ப்ரபாதே*
*நிப்ருதபதமகாரம் வல்லவீநாம் ப்ரவிஷ்ட:*
*முககமலஸமீரை ராசு நிர்வாப்ய தீபாந்*
*கபளிதநவநீத: பாது கோபால்பால: ||*

தயிர்க் கடையும் சப்தத்தால் விடியற்காலையில் கண் விழித்தெழுந்து, சந்தடி செய்யாமல் ஆயர் மங்கைகளின் இல்லம் புகுந்து அங்கு அவர்களால் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் விளக்குகளை தன் தாமரை போன்ற முகத்தின் மூச்சுக்காற்றினால் கடுக அணைத்துவிட்டு வெண்ணெயை விழுங்கும் கோவலர் சிறுவனான கண்ணன் நம்மைக் காப்பானாக.

(கிருஷ்ண கர்ணாம்ருதம் - லீலாசுகர்)




தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

ஆகஸ்ட் 1981

மலர் 12
இதழ் 3



*சிறப்பாசிரியர் :*

**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத்,**
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

**முழு விவரங்களுக்கு:**

EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.


## உள்ளுறை

# என் வாழ்க்கையில்....

நாங்கள் நவராத்திரியின் போது குடும்பத்துடன் திருப்பதிக்குச் சென்று பெருமாளை வருடம் ஒரு முறையாவது தரிசிப்பது வழக்கம். அதுபோல் 79ஆம் வருடம் ஏதோ காரணத்தால் போக முடியவில்லை. தொடர்ந்து தடங்கல் வந்து கொண்டேயிருந்தது.வருடம் முடியும் சமயம் (பங்குனி) வந்து விட்டதால் யுகாதிக்காவது குடும்பத்துடன் செல்ல முடியாவிட்டாலும் நானும் என் கணவரும் மட்டும் செல்வதாக நினைத்து காலை 4 மணிக்கு புறப்பட்டு சைதாப்பேட்டை வரை நடந்து நகிரி பஸ் 4-30க்கு பிடித்துத் திருப்பதிக்குப் போய், காலை 10 மணிக்கு க்யூவில் நின்றோம். தரிசனம் கிடைக்க இரவு 9 மணி ஆகிவிட்டது காலை 9 மணிக்கு ஆபீஸில் இருக்க வேண்டும். பஸ் நிலையத்திற்கு வந்து க்யூவில் நின்று சுமார் 1 மணி நேரம் கழித்து எல்லா பஸ்களும் போய்விட்டது இனி பஸ் இல்லை என்று கூறிவிட்டார்கள். அன்று காலை 10 மணிக்கு சாப்பிட்டது பசி எடுத்துவிட்டது. பின் ஓட்டல் சென்று சாப்பிட்டுவிட்டு அன்றே திரும்ப வேண்டும் என்பதால் ரூம் எதுவும் எடுக்கவில்லை. எங்கே தங்குவது என்று தெரியாமல் பஸ் நிலையத்திலேயே தங்குவது என்று அங்கு வந்தால், இரண்டு பஸ்கள் நின்று கொண்டிருந்தன. அப்பஸ்ஸுகள் அன்று இரவே திருப்பதிக்கு திரும்ப வேண்டும் என்று அவர்களுக்கு உத்திரவு வந்ததால், அவைப் புறப்பட தயாராக இருந்தன. நாங்கள் முன்பே க்யூவில் நின்று வந்தது அங்குள்ள காவலாளிகள் பார்த்ததால் எங்களுக்கு டிக்கெட் கிடைத்தது. 11-30 பஸ் ஏறி கீழ் திருப்பதிக்கு 1 மணிக்கும் வந்தோம். திருப்பதி - அரக்கோணம் பஸ் 3-30க்கு புறப்படும் என்று தங்குவதற்கு இடம் இல்லாவிட்டால் பஸ்ஸிலேயே படுத்து கொள்ளுங்கள் என்று டிரைவர் சொன்னார். வெளியில் தூங்கினால் சரியான நேரத்திற்கு எழுந்து வர முடியாது என்று பஸ்ஸில் உறங்கி விட்டோம். பஸ் புறப்பட்டதும் திருத்தணி வரை வந்து சென்னை பஸ் பிடித்து 8 மணியளவில் வீட்டிற்கு வந்து உடனே புறப்பட்டு ஆபீஸ் போய் விட்டார். திருப்பதிக்கு இப்பொழுதெல்லாம் ஒரே நாளில் பஸ்ஸில் சென்று க்யூவில் நின்று சர்வ தரிசனம் செய்து திரும்புவது என்பது நிரம்ப கஷ்டம். தன்னிடம் வந்து பக்தர்கள் பசியோடு போகக் கூடாது என்பதால் பஸ் இல்லை என்று சொல்லி நாங்கள் சாப்பிட்டுவிட்டு திரும்பியதும் பஸ் இருக்கிறது என்று டிக்கெட்டும் கிடைக்க வழி செய்து தூக்கம் கெடக் கூடாது என்று பஸ்ஸில் உறங்க வைத்து எட்டு மணிக்கு வீட்டிற்கு கொண்டு வந்து சேர்த்த பெருமாளின் பெருமையை என்னவென்று சொல்வது.

**பார்வதி பக்தவச்சலம்**
**திருவல்லிக்கேணி.**

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர நித்ய லட்டு தான அறக்கொடை திட்டம்

ஒவ்வொரு வருடத்தின் ஒரு குறிப்பிட்ட நாளன்று திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் சுவாமி கோயிலுக்கு வருகை புரியும் யாத்திரிகர்களுக்கு நிரந்தர லட்டு தானம் செய்ய உங்களுக்கு விருப்பமுள்ளதா?

உங்களுடைய புனிதமான இவ்அறக்கொடை திட்டத்தின் கீழ் திருமலைக்கோயிலுக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகர்க்கும் 25 கிராம் எடையுள்ள லட்டு வழங்கப்படும்.

இத்திட்டத்தினுல், அறக்கொடையாளருக்கு பிரிவு 80 ஜி (2)(பி) எண்ணுள்ள 1961–ஆம் ஆண்டு வருமான வரி சட்டத்தின் கீழ் இத்தொகைக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்படும்.

## இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள் பின்வருமாறு:

★ இத்திட்டத்தில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ரூ. 1 இலட்சத்திற்கான டிமாண்ட் டிராப்ட் ஒன்றினை (கிராஸ்) தி எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் பெயரில் எந்த வங்கி மூலமாவது வாங்கி அனுப்புதல் வேண்டும். இத்தொகையின் வட்டித்தொகைக்கு அவர் பெயரில் 25 கிராம் எடையுள்ள 25,000 லட்டுகள் தயாரிக்கப்படும்.

★ இவ்லட்டுகளைப் பகிர்ந்தளிப்பது வருடத்தின் ஒரு குறிப்பிட்ட நாளின் போது - அது உங்கள் பிறந்த நாளிலோ - திருமண நாளிலோ - உங்கள் தாய் தந்தையார் நினைவு நாளிலோ-புதிய கம்பெனிகள் ஆரம்பிக்கப்படவிருக்கும் நாளிலோ-வருடாந்திர கணக்கு ஆரம்பிக்கப்படும் நாளிலோ-நடைபெறும்.

★ அறக்கொடையாளரின் பெயர், யாத்திரிகர்களுக்கு விநியோகிக்கப்படும் பங்காரு வாகிலி அருகே ஒரு பலகையில் எழுதப்படும்.

## அறக்கொடையாளர்க்கு கீழ்வரும் வசதிகள் வழங்கப்படும்

★ வி. ஐ. பி. விருந்தினர் விடுதியில் தங்கு வசதி

★ குறிப்பிட்ட அந்நாளின் போது திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வரரின் தரிசனம், அறக்கொடையாளரின் குடும்பத்தைச் சார்ந்த 5 நபர்களுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

★ குறிப்பிட்ட அந்நாளின் போது, திருமலைக் கோயிலில் கொலுவின் போது அறக்கொடையாளரின் பெயர், கோத்ரம் வாசிக்கப்படும்.

★ அறக்கொடையாளர்க்கு வஸ்த்ரம் ஒன்று பஹுமானமாகக் கொடுக்கப்படும்.

★ அறக்கொடையாளர்க்கு தி. தி. தேவஸ்தானத்தாரின் 6 லட்டு மற்றும் 6 வடை வழங்கப்படும்.

★ விநியோகிக்கப்படும் நாளன்று அறக்கொடையாளர் அல்லது அவருடைய பிரதிநிதி யாராவது இருக்கலாம். யாரும் அன்று வராவிட்டால், விநியோகிக்கப்பட்ட நாளினை அறக்கொடையாளர்க்கு (மகா பிரஸாதப் பொட்டலங்களுடன் அனுப்பி வைப்பதுடன்) அறிவிக்கப்படும்.

மற்றைய விவரங்களுக்கு, செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

# என் வாழ்க்கையில்....

நாங்கள் நவராத்திரியின் போது குடும்பத்துடன் திருப்பதிக்குச் சென்று பெருமாளை வருடம் ஒரு முறையாவது தரிசிப்பது வழக்கம். அதுபோல் 79ஆம் வருடம் ஏதோ காரணத்தால் போக முடியவில்லை. தொடர்ந்து தடங்கல் வந்து கொண்டேயிருந்தது.வருடம் முடியும் சமயம் (பங்குனி) வந்து விட்டதால் யுகாதிக்காவது குடும்பத்துடன் செல்ல முடியாவிட்டாலும் நானும் என் கணவரும் மட்டும் செல்வதாக நினைத்து காலை 4 மணிக்கு புறப்பட்டு சைதாப்பேட்டை வரை நடந்து நகிரி பஸ் 4-30க்கு பிடித்துத் திருப்பதிக்குப் போய்,காலை 10 மணிக்குக்யூவில் நின்றோம். தரிசனம் கிடைக்க இரவு 9 மணி ஆகிவிட்டது காலை 9 மணிக்கு ஆபீஸில் இருக்க வேண்டும். பஸ் நிலையத்திற்கு வந்து க்யூவில் நின்று சுமார் 1 மணி நேரம் கழித்து எல்லா பஸ்களும் போய்விட்டது இனி பஸ் இல்லை என்று கூறிவிட்டார்கள்; அன்று காலை 10 மணிக்கு சாப்பிட்டது பசி எடுத்துவிட்டது. பின் ஓட்டல் சென்று சாப்பிட்டுவிட்டு அன்றே திரும்ப வேண்டும் என்பதால் ரூம் எதுவும் எடுக்கவில்லை. எங்கே தங்குவது என்று தெரியாமல் பஸ் நிலையத்திலேயே தங்குவது என்று அங்கு வந்தால், இரண்டு பஸ்கள் நின்று கொண்டிருந்தன. அப்பஸ்ஸுகள் அன்று இரவே திருப்பதிக்கு திரும்ப வேண்டும் என்று அவர்களுக்கு உத்திரவு வந்ததால், அவைப் புறப்பட தயாராக இருந்தன. நாங்கள் முன்பே க்யூவில் நின்று வந்தது அங்குள்ள காவலாளிகள் பார்த்ததால் எங்களுக்கு டிக்கெட் கிடைத்தது. 11-30 பஸ் ஏறி கீழ் திருப்பதிக்கு 1 மணிக்கும் வந்தோம். திருப்பதி - அரக்கோணம் பஸ் 3-30க்கு புறப்படும் என்று தங்குவதற்கு இடம் இல்லாவிட்டால் பஸ்ஸிலேயே படுத்து கொள்ளுங்கள் என்று டிரைவர் சொன்னார். வெளியில் தூங்கினால் சரியான நேரத்திற்கு எழுந்து வர முடியாது என்று பஸ்ஸில் உறங்கி விட்டோம். பஸ் புறப்பட்டதும் திருத்தணி வரை வந்து சென்னை பஸ் பிடித்து 8 மணியளவில் வீட்டிற்கு வந்து உடனே புறப்பட்டு ஆபீஸ் போய் விட்டார். திருப்பதிக்கு இப்பொழுதெல்லாம் ஒரே நாளில் பஸ்ஸில் சென்று க்யூவில் நின்று சர்வ தரிசனம் செய்து திரும்புவது என்பது நிரம்ப கஷ்டம். தன்னிடம் வந்து பக்தர்கள் பசியோடு போகக் கூடாது என்பதால் பஸ் இல்லை என்று சொல்லி நாங்கள் சாப்பிட்டுவிட்டு திரும்பியதும் பஸ் இருக்கிறது என்று டிக்கெட்டும் கிடைக்க வழி செய்து தூக்கம் கெடக் கூடாது என்று பஸ்ஸில் உறங்க வைத்து எட்டு மணிக்கு வீட்டிற்கு கொண்டு வந்து சேர்த்த பெருமாளின் பெருமையை என்னவென்று சொல்வது.

**பார்வதி பக்தவச்சலம்**
திருவல்லிக்கேணி.

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர நித்ய லட்டு தான அறக்கொடை திட்டம்

ஒவ்வொரு வருடத்தின் ஒரு குறிப்பிட்ட நாளன்று திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் சுவாமி கோயிலுக்கு வருகை புரியும் யாத்திரிகர்களுக்கு நிரந்தர லட்டு தானம் செய்ய உங்களுக்கு விருப்பமுள்ளதா?

உங்களுடைய புனிதமான இவ்அறக்கொடை திட்டத்தின் கீழ் திருமலைக்கோயிலுக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகர்க்கும் 25 கிராம் எடையுள்ள லட்டு வழங்கப்படும்.

இத்திட்டத்தினுல், அறக்கொடையாளருக்கு பிரிவு 80 ஜி (2)(பி) எண்ணுள்ள 1961–ஆம் ஆண்டு வருமான வரி சட்டத்தின் கீழ் இத்தொகைக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்படும்.

## இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள் பின்வருமாறு:

★ இத்திட்டத்தில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ரூ. 1 இலட்சத்திற்கான டிமாண்ட் டிராப்ட் ஒன்றினை (கிராஸ்) தி எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் பெயரில் எந்த வங்கி மூலமாவது வாங்கி அனுப்புதல் வேண்டும். இத்தொகையின் வட்டித்தொகைக்கு அவர் பெயரில் 25 கிராம் எடையுள்ள 25,000 லட்டுகள் தயாரிக்கப்படும்.

★ இவ்லட்டுகளைப் பகிர்ந்தளிப்பது வருடத்தின் ஒரு குறிப்பிட்ட நாளின் போது - அது உங்கள் பிறந்த நாளிலோ - திருமண நாளிலோ - உங்கள் தாய் தந்தையார் நினைவு நாளிலோ-புதிய கம்பெனிகள் ஆரம்பிக்கப்படவிருக்கும் நாளிலோ-வருடாந்திர கணக்கு ஆரம்பிக்கப்படும் நாளிலோ-நடைபெறும்.

★ அறக்கொடையாளரின் பெயர், யாத்திரிகர்களுக்கு விநியோகிக்கப்படும் பங்காரு வாகிலி அருகே ஒரு பலகையில் எழுதப்படும்.

## அறக்கொடையாளர்க்கு கீழ்வரும் வசதிகள் வழங்கப்படும்

★ வி. ஐ. பி. விருந்தினர் விடுதியில் தங்கு வசதி

★ குறிப்பிட்ட அந்நாளின் போது திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வரரின் தரிசனம், அறக்கொடையாளரின் குடும்பத்தைச் சார்ந்த 5 நபர்களுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

★ குறிப்பிட்ட அந்நாளின் போது, திருமலைக் கோயிலில் கொலுவின் போது அறக்கொடையாளரின் பெயர், கோத்ரம் வாசிக்கப்படும்.

★ அறக்கொடையாளர்க்கு வஸ்த்ரம் ஒன்று பஹுமானமாகக் கொடுக்கப்படும்.

★ அறக்கொடையாளர்க்கு தி. தி. தேவஸ்தானத்தாரின் 6 லட்டு மற்றும் 6 வடை வழங்கப்படும்.

★ விநியோகிக்கப்படும் நாளன்று அறக்கொடையாளர் அல்லது அவருடைய பிரதிநிதி யாராவது இருக்கலாம். யாரும் அன்று வராவிட்டால், விநியோகிக்கப்பட்ட நாளினை அறக்கொடையாளர்க்கு (மகா பிரஸாதப் பொட்டலங்களுடன் அனுப்பி வைப்பதுடன்) அறிவிக்கப்படும்.

மற்றைய விவரங்களுக்கு, செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

# குமரன் குடியிருக்கும் வீடு-பழநி

**முகவுரை**

முருகன் என்று அழைத்தால் என்ன, குமரன் என்று உரைத்தால் என்ன, கந்தன் எனச் சொன்னல் என்ன, கார்த்திகேயன் என்ருல் என்ன யாவும் முருகனுடைய திருவுருவமேயன்றி வேறல்ல என்பதாம். ஆண்டவன் எல்லார்க்கும் பொது வானவன். அவன் இருந்து அருள் புரியும் ஸ்தலங்களும் அடியார்களுக்குச் சொந்தமானது. இவ்வகையிலே முருகனின் கருணை பொழியும் திருமுகம் தரிசனம் செய்ய ஆனந்தம்.

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனிருக்கும் வீடு என்று வைத்திருக்கிருர்கள். குவலயத்தோர் போற்றி வணங்கும் இம்முருகப் பெருமான், கந்தாக் என்பார்க்கு! கருணை மிகக் காட்டிடுவானும். முருகா! என்பார்க்கு முன் நின்று காத்திடுவான் என்பது பக்தர்கள் நம்பிக்கை.

ஞான வழிக் காட்டும் தெய்வம், குமரன் குடியிருக்கும் வீடு, பழநி பற்றி முழுதும் வர்ணிக்க வார்த்தையில்லை என்ற போதிலும் தெரிந்தளவு கட்டுரையாகத் தொகுத்தளித்திருக்கிற விபரமறிய வேண்டியது.

அருட் பார்வை, திருநீற்று மேனியழகுக் காணக் கூட்டம் கூடுகிறது இச்சந்நிதியில். இக்காட்சியைக் காண மெய்சிலிர்க்கும். இதை அவன் மகிமையில் நம்பிக்கைக் கொண்டோர் நன்கறிவர்.

நக்கீரர்க்கு ஏற்பட்ட ஆபத்தை நீக்கி திருமுருகாற்றுப்படைப் பாடச் செய்த இறைவன் எதிர் வந்து நம் பாவங்களையும் ஏற்று வேண்டிய வரங் கொடுத்து வருவான் என்பதாம். முருகக் கடவுளைக் குறித்து பழநி என்கிற பதியைப் பற்றி இங்குக் கொஞ்சம் சிந்திப்போமாக.

**முருகன் வரலாறு**

தேவரிஷி அசுரர் தொல்லை தாங்காமல் கயிலை சென்று சிவனிடம் துன்பத்தை நீக்கியருள வேண்ட, விஸ்வரூபத்தின் 5 தலை (ஈசானம், தத் புருஷம், வாம தேவம், அகோரம், சத்யோசாதம்) சங்கரி தலை ஒன்றுசேர்ந்து ஆறுதலையின் நெற்றிக் கண்ணின்றும் ஆறு பொறி பிறப்பிக்கலானுர். சக்தி பயந்து ஓட, பதினன்கு உலகமும் கிடுகிடுவென்று நடுங்க, ஓடிய அவசரத்தில் சக்தியின் கால் சதங்கையிலிருந்து நவமணி சிதற, வாயு அக்னி தாங்கி கங்கையில் சேர்க்க, உக்ரம் தாங்காமல் சரவணப் பொய்கையில் சேர்ப்பதே சோமாஸ்கந்த காட்சி. சரவண ஆறுமுகனுடன் பார்வதி ஆறையும் ஒன்ருகத் திரட்ட ஆறு ஒன்ருனது. அது முதல் ஆறுமுகம். ஞானப் பழம் கிடைக்கவில்லை என்று கோபங்கொண்ட ஆண்டித் திருக்கோலம் பழநியிலே. இடும்பன் தூக்கி வந்த மலை மீது தண்டபாணி நிற்க, பராசக்தி வா எனக்கையிலைக்கு அழைக்க, மறுத்த முருகனைப் பழம் என்கிருள். அகஸ்த்தியர் ஆணைப்படி இருமலை தூக்கி வந்த இடும்பன் காரணம் பற்றி காவடி ஆட்டம் பிறந்தது.

**பழநி பெருமை**

அறுபடை வீட்டுத் தத்துவங்களுள் சிறந்து விளங்கும் திருத்தலம் பழநி. இது 3-வது படைவீடு எனப் போற்றப்படுவதாக அமைந்திருக்கிறது. கைலாயத்தில் அகஸ்தியப் பெருமானுல் பூஜிக்கப் பெற்றக் குன்றுகளே குமரன் குடியிருக்கும் கோயிலாயிற்று. அதுவே அருள் நாட்டத்தில் பக்தி கொண்டோர் அழைக்கும் பழநி.

போகர் அமைத்த யோக ஸ்தலம் பழநி. அங்கே நவபாஷாணப் பழனி ஆண்டவன் திருவடி, அடியார் வினையகற்றும் ஆற்றல் படைத்தது; தோன்ருத் துணையாக நிற்பது.

முருகனடி. எஸ். ஜெயராமன்,
சேலம் டவுன்.

செந்தமிழ் போதித்த சிவகுமாரன் இங்கே பக்தர் போற்றும் ஆண்டவனுக நிற்கிருன். ஆவேசக் கனல் காட்டி ஆட்டி வைக்கிருன் அவர் தம் அன்பர்களை. இன்பமடையும் பொருட்டு இகபர சௌபாக்யம் பெற, இவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை எனலாம். அங்கிருந்து அருள்புரியும் காரணத்தால் பழமையான பழநி என பாரோர் போற்ற எழுந்தருளியிருக்கின்ருன் முருகன்.

அதிசயம் அனேகமுற்றப் பழனி என்பது அருணகிரி வாக்கு. திருப்புகழால் மேலும் இதற்கு ஏற்றம் எனலாம். உனது பழநிமலை என்னும் ஊரைச் சேவித்தறியேனே என்ருர் அருணகிரியார். இத்தனைச் சிறப்புடைய தலம் பழநி. புராதன சிறப்பும் பூர்வீக வரலாற்றுச் சிறப்பும் காட்டும் தெய்வத் திருப்பழநி என்ருல் மிகையாகாது.

**பழம் 'நீ' வரலாறு**

தமிழ் நாட்டுத் தண்டபாணித் தெய்வத்திற்கு தனி மகிமையுண்டு. ஒரு சமயம் நாரதர் மாதுளம் பழம் ஒன்று திருக்கயிலைமலை வந்து பரம சிவனிடத்திலே தர அதை அவர் உலகை ஒரு நொடியில் வலம் வருவோர்க்கு தருவேன் என, விநாயகர்

தாய் தந்தையே உலகம் எனக் கொண்டு அவர்களை வலம் வந்து அப்பழத்தை வாங்கி வைத்திருப்பதைக்கண்ட குமாரக் கடவுள் கோபம் கொண்டு மயிலை விடுத்து, மகுடம் குண்டலம் பொன்னுடை முதலிய ஆபரணங்களையெல்லாம் கழற்றியெறிந்து, தண்டமொன்றை கையிலேந்தி கௌபீன தாரியாய் பழநி மலை வந்து தங்கியதாகவும், இறையனாரும் உமையம்மையாரும் "மாதுளங்கனியும் ஒருகனியோ? நீயே என்றும் தெவிட்டாப் பேரின்பச் சுவையை இடைவிடாது கொடுக்குஞ் சிவஞானப் பழம் ஆகும். அங்ஙனமுள்ள 'அடியார்க்குகந்த கனி நீயே யாவாய். உனக்கு வேறு பழமும் வேண்டுமோ?" என்றவாறு பலப்பல இனிய மொழிகள் கூறி பழநி எனப் புகன்றமையால் அத்தலம் அற்றை நாட்டொடங்கிப் பழநி எனப்பெயர் பெற்றது.

சுவாமியும் பழனியாண்டவன் எனவும் தண்டாயுதபாணி எனவும் பெயர் பெற்றார். இங்குள்ள ஆண்டவன் திருமேனி போக சித்தரால் நிறுவப் பெற்றது. அவர் பூஜித்து வந்தது என்பர்.

### இடும்பனும் - காவடியும்

முன்னொரு காலத்தில் அகஸ்தியர் சிவ பூஜை செய்து சிவலிங்கம் பெற்றார். சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாரகன் என்னும் அசுரர்களின் சேனைகளுக்கும், அக்குலத்தாருக்கும் வில் வித்தை முதலிய அஸ்த்ர சாஸ்திர வித்தைகளைப் பயிற்றுவிக்கும் குருவாக விருந்தான் இடும்பாசுரன் என்பவன். வேலாயுதத்தால் சூரசம்ஹாரம் நிகழ்ந்தவுடன் இடும்பியான தன் மனைவியுடன் அகஸ்தியருக்குச் சீடனானான். திருவருளினாலே சக்தி சிகரம் சிவ சிகரம் இரு மலைகளையும் பூசித்தான். அகஸ்தியரிடம் உபதேசம் பல பெற்றான். அதனால் வரம் பல பெற்றான் என்பது சரிதம். ஒரு சமயம் திருக்கேதாரத் தலத்திற்குப் பக்கமுள்ள பூர்ச்சவனத்தில் உள்ள இரு சிகரங்களையும் எடுத்து பொதிகைக்கு கொண்டு வந்து சேர்த்து பெறற்கரிய பாக்யமடைய அதன் மகிமையை விதிப்படி இடும்பனுக்கு எடுத்துரைத்தார், அகஸ்த்ய மஹரிஷி. இடும்பன் இரண்டு பர்வதங்களையும் தன் பலத்தால் தூக்கி காவடி வடிவமாக தோளில் சுமந்து கொண்டு திருவாவினன் குடியாகிய பழநி தலத்தை அடைய அங்கே ஆறுமுகன் விளையாட்டு ஆரம்பமாயிற்று. மலைகள் அதிபாரமாகத் தோன்ற அங்கே இறக்கி வைத்து இளைப்பாறி பின்னர் தூக்க முயற்சித்த போது அசைக்க முடியவில்லையாம். அக்குன்றுகள்தான் இன்று சிவகிரி (பழநி மலை) சத்தியகிரி (இடும்பன் மலை) என்று காட்சி கொடுக்கின்றன என்பர்.

குன்றினை விடுத்த இடும்பன் சினங்கொண்டு மலைமேல் ஏறிப்பார்க்கையில் முதிர்ந்த கனியாய், கட்டழகு உடைய பாலனாய் சிவகுமாரனாய் சிறுவன் ஒருவன் நிற்பது கண்டு முருகனோ என்றெண்ணிச் சமீபித்தான். ஆயிரங்கோடி சூரியர் ஒன்றெனதிரண்டாற் போன்ற காந்தி, உபவீத மணிந்த மார்பு, கையில் தண்டம் விளங்க நகைத்தார் குமாரக்கடவுள். 'இருமலைகளும் எம் இருக்கை ஆகும். வலிமை உள்ளதென்றால் மலையை கொண்டு போ' என்றார் குமாரஸ்வாமி. இருவருக்கும் போர் மூண்டது. மடித்த வாயினனாய் பாய்ந்த இடும்பன்மீது சுடர் வேலதுபட்டு உயிரற்ற நிலையில் விழுந்திறந்த சத்தம் கேட்ட இடும்பி மனம் பதை பதைத்தோடி வந்து புலம்பினாள்; கணவருக்காகக் கந்தன் கருணை வேண்டி நின்றாள்.

முருகன் மயில் வாகன ரூடராய் கணங்கள் புடைசூழ வாத்தியங்கள் ஒலிப்ப வந்தருளி திருக்கடைக் கண் நோக்கினால் பிச்சை தந்து துயில் விட்டெழுந்தாற் போல இடும்பனை ஏற்றுக் கொண்டார். அன்று முதல் அம்மலை அடிக்கணிருந்து தேவரீரது குற்றவேல் புரிந்திருக்கும் வரம் பெற்றான். மலையைக் காக்கும் பெரு வரமளித்து ரக்ஷித்தார்.

## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| அர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

### காவடி பிறந்த கதை

இடும்பாசுரன் இரு பருவதங்களை யும் சுமந்து வருங்காலத்து, பிரம தண்டம் புயதண்டாகவும் அஷ்ட திக்கு நாகங்களும் கயிறுகவும், இரு மலைகளையும் பாம்புகளால் உறி போலச் செய்து இடும்பன் அவை களைக் கவ்விக் கொண்டு காவடி எடுப்பாற்போல நடந்து வருவதை சம்பந்தப்படுத்தியே காவடி பிறந்த தாக அறிகிறோம்.

மேலும் இடும்பன் தான் காவடி யாகக் கட்டி வந்ததுபோல இச்சிவக் குமாரனை முருகனுக்குக் காவடி எடுத்து வந்து ப்ரார்த்திப் போருக் குக் கருணை காட்ட வேண்டும் என்ப தாகவும் விக்ஞாபித்துக் கொண் டதை ஆண்டவனும் ஏற்றுக் கொண் டான். இவ்விதமாகக் காவடி செலுத் தும் தெய்வப்பணி தமிழகத்தில் திரு வருளைக் கூட்டியது எனலாம்.

### காவடிகள் பலவிதம்

பால் காவடி, பன்னீர் காவடி, சர்க்கரைக் காவடி, சந்தனக் காவடி, சேவற்காடி, ஸர்ப்பக் காவடி என்று காவடிகள் பலவிதம். பக்தர்கள் அவர்தம் பக்குவத்திற் கேற்ப இப்பிரார்த்தனையைச் செலுத்துவதைப் பார்க்கலாம். கால் மாறி விளையாடும் இக்காவடி ஆட் டம் அனைவரையும் இழுக்கும் தன்மை யது. காவடிச் சிந்து பாடுவது பரம் பரை வழக்கமாக இருந்து வருகிறது. காவடி செலுத்துவது தெய்வத்திரு வடி காட்டும் என்று மக்களை நம்ப வைக்கிறது இந்நிகழ்ச்சி.

### அருட் திருமேனி

பால், பழம், பஞ்சாமிர்தம், பன் னீர், சந்தண அபிஷேகங்கொள் கிறான் ஆண்டவன் இங்கே. சந்தணம் மணக்கும் தென் பழனிக் கோயிலிது. ஆனுல் அவன் தம்பி ஐயப்பனே நெய் மணக்கும் கோயிலிலே இருக் கின்றான்.

வானவீதியில் நீந்தி ஓடவும் மற்றும் பலவும் சித்தி பெற்றவர் போகர். அவரால் நிறுவப் பெற்ற அருட் திரு மேனியே பழனியாண்டவன் திருக் கோலம். நாள் தோறும் ஆயிரக் கணக்கான மக்கள் ஸேவிக்கிறார்கள். பஞ்சாமிர்தம் முதல் பன்னீர் வரை இடைவிடாத அபிஷேக அலங்காரங் கொள்கிறான் இவ்வாண்டவன். குழந் தையாகவும், குமரனாகவும், தண்ட பாணியாகவும், ராஜ ஸேவையாகக் காட்சி தரும் இவ்வாண்டவனின் தோற்றத்தைப் போல் வேறெங்கும் பார்க்க முடியாது. அதிசயம் நிகழ்த் தும் முருகன் தத்துவம் போதித் தான் என்றறிக. ஆகாய கங்கை முதலிய புண்ய தீர்த்தங்கள் எல்லா வற்றாலும் அபிஷேகஞ் செய்து பூமாரி பொழிந்து,அபிஷேகக் குமார மூர்த்தி என்னும் திருநாமஞ் சாத்தி பிரார்த்தித்து பக்தர்கள் வழி பட் டனர் என்று நூல்கள் கூறுகின்றன.

தேவர்கள் சார்பிலே சர்வேஸ்வர னும், ரிஷிகளின் சார்பிலே அகஸ்தி யரும், நராம்சத்தின் சார்பிலே அருணகிரியும் முருகவேளினிடத் திலே உபதேசம் பெற்றார்கள். இது முருகப் பெருமானின் தனிப்பெரும் ஏற்றம் என்றறிக. எல்லா அநுக்ரஹ கங்களுக்கும் காரணமாயிருக்க இறை வன் அருள்கின்றான் என்ற நிலையைக் குறிப்பதே இது.

### தமிழ்க் கடவுள்

தமிழான உருவந்தான் தண்ட பாணி. தமிழ்க் கலையாவும் முருகப் பெருமானின் திருமேனி.

ஔவைக்கு அமுதத் தமிழ் தந்த செந்தமிழ் வித்தகன். இருப்பவல் திருப்புகழ் நெருப்பையும் எரிக்கும் என்றபடி அருணகிரியை பாட வைத் தவன். இவரிடத்திலே உபதேசம் பெற்றவர்களில் அகஸ்த்தியர் முதன் மையானவர்.

நக்கீரர் தாமுரைத்த முருகாற்றுப் படை முருகனுக்குகந்தது. ஊமைக் கும் அருள் செய்தவன். குமரன் பரனுக்கு குருவானான் ஆனதால் குமரகுருபரன் முழுத்தமிழ்த் தெய் வம். முத்தமிழுக்கு உறைவிடமான வன்.

ஆறு கரத்தோடு ஓர் அறு சிரம் சேர்ந்தால் எண்ணிக்கை வருவதும் பதினெட்டாம். சீராக இனம் பிரித் தால் செந்தமிழ் மெய்யெழுத்து நேராக வருவதும் பதினெட்டாம். வல்லினம் தனைக்கோரும் அவன் நெஞ்சம் தமிழுக்கு அவன்தான் தலை வன் என்று காட்டுகிறது.

### சரவணப் பொய்கை

சரவணப் பொய்கை கங்கையைப் போல் வற்றாதது. முருகப் பெரு மானுடைய அவதாரம் இங்குதான் நடந்தது. ஒரு சமயம் முருகன் செந் தாமரையில் கொலு வீற்றிருந்தார். கைக் குழந்தைக்குப் பாலூட்ட கார்த்திகை பெண்கள் முன் வந் தனர். கருணை முகங்கள் ஆறு குழந்தைகளானது. தவழ்ந்து விளை யாடி வந்தது. சிவபெருமானும் உமா தேவியாரும் வந்து சரவணப் பொய் கையை அடைந்து ஆறினையும் அப் படியே அள்ளி எடுத்து அணைத்து ஒன்று சேர்த்தமையாலே ஸ்கந்தனா னான். முருகன் தன் பால பருவ லீலையை நடத்தியது சரவணப் பொய் கையில்தான் என்பது வரலாறு.

### திருவாவினன் குடி

திரு - லக்ஷ்மி, ஆ - காமதேனு, இனன்-சூரியன், கு-பூமி, டி-அக்னி முதலியோர் இங்கு முருகனை பூஜை செய்து வரம் பெற்றனராம். அதனால் திருவாவினன் குடி என்று பெயர் இத்தலத்திற்கு வழங்குகிறது.இங்குக் குழந்தை வேலாயுதன் மயில் மேல் அமர்ந்து அருள் பாலிக்கிறான். பற் பல திருவிளையாடல்களைச் செய்திருந் தார். இவ்வாறு திருவாவினன் குடி யிற் சென்றான் குன்றுதொறு நின்றான் என்பது பழநி ஸ்தல புராணம்.

### ஷண்முக மூர்த்தி

ஆறுமுகம் துணை செய்யும் என்பது அன்பர்கள் நம்பிக்கை. சரவண வாயின் கண்ணே பெருமானுர் ஆறு குழந்தைகளாக நின்று விளையாடுங் காலத்தில் பரமேஸ்வரி இறைவனுடன் சென்று தரிசிக்குங் மாத்திரத்து ஆறு திருமுகமும் பன்னிரு திருக்கரங்களுமுடையாரானுர்.

ஆதி சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி, பராசக்தி, ஞான சக்தி குடிலா சக்தி என்றும் அ, உ, ம், நாதம், விந்து, சத்தி என்னும் ப்ரணவங்களாகுமென்றும், அத்வாக்கள் என்னுமவைகளாம் என்றும், ஐஸ்வர்யம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் அறுகுணங்களாகுமென்றும் அறுமுகத் தத்துவம் பலவகையாகச் சொல்லப்படுகின்றன.

### அறுபடை வீடு

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல் என்னும் அறுவகையிடங்களினுமுள்ள முதல் ஆறறி விறுதியாக உள்ள அறுவகை உயிர்களும் அறுவகைச் சமயங்களும் தத்துவஞ் சொல்லுமுகமாக அறுபடை வீடானது என புராணமுரைத்தது. முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்றுன பழனியில் மற்ற 5 படை வீடுகளின் மாதிரியையும் அமைந்துள்ளது பொருத்தமாகவுள்ளது.

பண்டைக்காலத்தில் மாமன்னர்களின் இராணுவம் தங்கியிருந்த இடத்திற்கு படைவீடு என்ற பெயர் உண்டு. முருகன் கோயில் கொண்டுள்ள படைவீடு பிரார்த்தனை ஸ்தலங்களாக விளங்குகிறது. இதற்கு அனுபூதிமானுன அருணகிரியும் தமது திருவகுப்பில் ஆறுநிலையென்று முதலாகிய பரங்கிரியையும் எனத் தொடங்கி பழநி ஈருக அறுபடை வீட்டிற்கு விளக்கம் தருகிறுர். ஆறு தத்துவங்களை குறிக்கும் யோக நிலையே அறுபடைவீடு. ஆறு திருப்பதி கண்டு என்று குமரகுருபரர் முருகனைப் போற்றுகிறுர்.

### மலைக்கோயில்

மலைக்கோயில் தெய்வம் முருகன் என சிறப்பிக்கப்படுகிறுர். இதற்கு மேற்கோள்கள் திருமுருகாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, கந்தர் சஷ்டி முதலானவைகளில் காணப்படுகிறது. குன்று தோறுடல் கந்தப்பெருமான் மலை தெய்வம் என்பதைக் காட்டுவதாகும். பழந்தமிழிலக்கணங்களும் இச்சுவாமி மலைமீது எழுந்தருளும் தலைவன் என்று வர்ணிக்கின்றன. அண்ணுமலையின் மகன், மலைமகள் மைந்தன், மலையடித்தமாவீரன், மலைமகள் மணுளன், குகவேள் என்ற பதங்கள் மேலும் இதற்கு அணி செய்கின்றன என்று என்னற்கு ஐயமுண்டோ? சிவக்குமாரனுகிய முருகன் தந்தையைப் போலவே மலைவாசி. மலைகளுக்கெல்லாம் இறைவன் முருகன் எனக் கொள்க. மனப்பிணியை போக்க மலைமேல் நின்று காட்சி தருகிறுன் முருகன். கிரிபிரதட்க்ஷிணஞ் செய்து படி ஏறவேண்டியது முக்யம்.

### பழநியம்பதி

வேண்டிய பழம் விரும்பி ஆண்டியாய் கோலங்கொண்டது பழநி என்று ஓர் வரலாறு வழங்குகிறது. மலையைச் சுற்றி வளப்பு மிகுந்த நல்ல அகலமான வீதி உண்டு. இவ்வீதியில் வழிநெடுகிலும் பல கோவில்களும் மடங்களும் உள்ளன. தேவஸ்தானத்தாரால் நடத்தப்படும் ஏழை இல்லங்களும் இருக்கின்றன. சாது சுவாமிகளினுடைய அன்னதான மடாலயம் காலிவீதியில் மிகப் பிரஸித்தம்.

படிவாசலில் பாத விநாயகர், கொஞ்சம் தூரம் சென்றதும் இடும்பன் கோவில். மேற்கு திசை காட்டும் மலைக் கோவில் பழநியம்பதி. பண்டாரக்கோலமாய் போகர் அமைத்த திருமேனியும் இத்திசை நோக்கியே இருப்பது இவ்வாண்டவனுக்கோர் சிறப்பு அம்சமாகும்.

போகர் சந்நிதி, அவர் பூஜித்த தேவி புவனேஸ்வரி இன்றும் இங்கு வழிபாட்டில் உள்ளது. உள்ளங்கவர் கள்வன் பழநிதலத்தில் வீற்றிருந்து அடியார் அக்ஞான இருளை போக்குகிறுன். நீங்காத தெரிசனந் தந்து திருவடி தீக்ஷை காட்டி நிற்கும் முருகன் உறவை வலுப்படுத்திணுல் வாழ்வு வளம் பெறும் என்பது ப்ரத்யக்ஷம்.

### பஸ் - ரயில் மார்க்கம்

திண்டுக்கல்-கோயம்புத்தூர் மார்க்கத்தில் 37 வது மைலில் ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. ஈரோடு, மதுரையிலிருந்தும் மற்ற பெரிய இடங்களிலிருந்தும் பஸ் போக்குவரத்து உண்டு. ஷண்முக நதி என்ற ஆறு ஒரு சில மைல் தொலைவில் உள்ளது. குளிக்க ஆனந்தம்.

கீழ்க்கோயில் திருவாவினன்குடி—பக்கத்தில் சரவணப் பொய்கை. பழநி மலைக்கோயில் 700 படிகள் போல கொண்டது. விஞ்ச் முதலான இழுவை ரயில் வசதியும் உண்டு. பழநி விபூதியும், பஞ்சாமிர்தமும், மற்றும் படக்கடையில் படங்களும் இங்குச் சிறப்பிடம் பெறுகின்றன.

### அருள் பெற்ற அடியார்கள்

ஔவை, அகஸ்தியர், அருணகிரி, இடும்பாசுரன், போகர், நக்கீரர் மற்றும் மாண்டுக மஹரிஷி, மணிவாசகர் முதலானேர்.

குமரகுருபர சுவாமிகள் முதலானவர்கள் சித்தி கைவரப் பெற்றிருந்தார்கள் என்றுல் முருகன் உபாஸனையே காரணம். அவ்வன்பின் முதிர்ச்சியில் அனைத்தும் பெற்றுர்கள். அவர்கள் வழிபட்ட அவ்விறைவனை நாமும் வழிபட அவ்விறைவனுடைய அருளையே பிரார்த்திக்கிறேன். முகுந்தன்—ருத்ரன்—கமலன் என்ற மூம்மூர்த்தியையும் வழிபட்டதினுடைய பலன் முருகன் ஒருவனை வழிபட்டாலே கிடைக்கும் என்பது ''முருக'' என்றதின் பொருள். இதையெல்லாம் உணர்ந்து அவனது திருக்கோயில்களையெல்லாம் நாமும் வலம் வருவோமாக. நல்லருள் பெற முயற்சிப்போமாக.



# கீதை காட்டும் நல்வழி



**அத்தியாயம்-13**

**க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்**

பகுதி — 1

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

ஸாம வேதத்தில் நான்கு மகா வாக்கியங்களுள் ஒன்றான 'தத் த்வம் அஸி' காணப்படுகிறது. 'நீ அது வாக இருக்கிறாய்,' என்பது இம்மகா வாக்கியத்தின் பொருளாகும். இதில் 'நீ' என்பது நம் போன்ற ஜீவர்களை யும், 'அது' என்பது பிரம்மத்தையும் குறிக்கிறது. ஜீவன் அடிப்படையில், பிரம்ம சொரூபமே. மாயையின் காரணமாக, அறியாமையின் விளை வாக அவன் தன்னை சரீரம், மற்றும் மனம், புத்தி ஆகியவற்றுடன் ஒன்று படுத்திக் கொள்ளுகின்றான் என் பதை இந்த வாக்கியம் சுட்டிக் காட்டுகிறது. இதைத்தான் ஸ்ரீ சங்

கரர் ''ஜீவோ பிரம்மைவ நாபர:'' என்றார். 'ஜீவன் பிரம்மமே-வேறல்ல' என்பது இதன் கருத்து.

'தத் த்வம் அஸி' என்ற இம் மகிமை பொருந்திய மகா வாக்கியத்தின் விளக்கமாக பகவத் கீதை அமைந்துள்ளது. இதில் 'த்வம்' 'தத்' 'அஸி' என்ற மூன்று வார்த்தைகள் உள்ளன. கீதையில் உள்ள 18 அத்தியாயங்களும் இதற்கேற்ப மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, முதல் ஆறு அத்தியாயங்கள் 'த்வம்' பதத்தின் விளக்கமாக அமைந்து கர்ம யோகத்தைப் பற்றி விரிவாகப் பேசுகின்றன. அடுத்த ஆறு அத்தியாயங்கள் 'தத்' பதத்தின் விளக்கமாக அமைந்து பக்தி யோகத்தைப் பற்றி விரித்துரைக்கின்றன. கடைசி ஆறு அத்தியாங்கள் 'அஸி' என்ற பதத்தின் விளக்கமாக ஞான யோகத்தைப் பற்றியதாக அமைகிறது. 'அஸி' என்ற வார்த்தை ஜீவனுக்கும் பிரம்மனுக்கும் இடையேயுள்ள தொடர்பை அதாவது இரண்டும் வேறல்ல ஒன்றே என்பதை விளக்குகிறது.

எனவே நான்கு வேதங்களில் முக்கியமான ஸாமவேதத்தில் காணப்படும் மகா வாக்கியத்தின் விளக்கமாக அமையும் பகவத் கீதையில் இந்த அத்தியாயத்திலிருந்து ஞான யோக விளக்கம் ஆரம்பமாகிறது.

உலகப் பொருள்களைப் பொதுவாக நாம் இருவகையாகப் பிரிக்கலாம். சேதனம், அசேதனம் என்றோ, ஜடம், சக்தி என்றோ, பிரகிருதி, புருஷன் என்றோ, சரீரம், ஆன்மா என்றோ இந்த இரண்டும் அழைக்கப் படுகின்றன. ஆங்கிலத்தில் இதை Matter என்றும் Energy என்றும் சொல்லலாம். சிவனும், சக்தியும் இவ்விரண்டின் விளக்கமாகவே அமைகின்றனர். பொருளும் சக்தியும் பிரிக்க முடியாதவை. ஒன்று அழிந்தால் மற்றதாக மாறுகிறது என்பது இருபதாம் நூற்றாண்டு கண்ட மாபெரும் விஞ்ஞானியான ஐன்ஸ்டீனின் கண்டுபிடித்தமாகும். புகழ் பெற்ற சமன்பாடான $E=mc^2$ என்ற ஐன்ஸ்டீனின் சூத்திரப்படி, E என்பது Energy யையும், M என்பது Matterயும் குறிக்கின்றன. பிரகிருதியும், புருஷனும், சிவமும், சக்தியும், ஜடமும், சேதனமும், ஜீவனும், ஆன்மாவும் அடிப்படையில் ஒன்றே என்பதை விஞ்ஞான பூர்வமாக விளக்கிக் காட்டிய பெருமை ஐன்ஸ்டீனைச் சாரும். இந்தச் சமன்பாடு கண்டு பிடிக்கப்பட்டது ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பேயாகும். ஆனால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இன்று கண்டுபிடிக்கப்பட்ட இந்த விஞ்ஞான உண்மைக்கு ஆன்மீக ரீதியில், சமய அடிப்படையில் மதி நுட்பம் மிக வாய்ந்த நம் முன்னோர் ஒரு அதி அற்புதமான வடிவத்தையே வடித்துக் கொடுத்தனர். அதுதான் ஆலயங்களில் நாம் காணும் அர்த்த நாரீஸ்வர வடிவம். அதாவது உமையொரு பாகனுகிய சிவனாரின் திருவுருவம். ஒரே மனித உருவத்தில் பாதி பெண். அதாவது சக்தி வடிவம். மறுபாதி ஆண். அதாவது சிவ வடிவம். இது பொருள் — சக்தி சேர்க்கையைக் குறிக்கிறது. 'சிவ: சக்த்யா யுக்த: யதி பவதி சக்த: ப்ரபவிதும்' என்ற ஆதிசங்கரரின் ஸௌந்தர்யலஹரி முதல் சுலோகத்தின் முதல் அடியின் விளக்கமே இவ்வுருவம். நாம் காணும் இப்பிரபஞ்சம் அனைத்தும் சிவசக்தி சேர்க்கையின் விளைவேயாகும்.

ஜடப்பொருள் தானுக இயங்காது. சக்தி வெளிப்படுவதற்குப் பொருள் வேண்டும். எனவே ஒன்றை ஒன்று சார்ந்தே இவை இரண்டும் உள்ளன. இயற்கையில் நமக்குக் கட்புலனுகும் மற்றும் கட்புலனுகாப் பொருள்கள் யாவற்றையும் பின் நின்று இயக்குவது இறைச் சக்தியேயாகும். இறைச் சக்தி மிகவும் ஸ்தூலமானது என்பதால் அதுஇயற்கையிலுள்ள பொருள்கள் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறது. தண்ணீரும் அதன் தண்மையும் போன்று, நெருப்பும் அதன் உஷ்ணமும் போன்று இயற்கையும் இறைவனும் பிரிக்க முடியாதவை. இயற்கை என்ற வார்த்தையை ஆராய்ந்தாலே அதனது உட்பொருள் விளங்கும். எந்த ஒன்று இயங்குகிறதோ அது இயற்கை எனப் படுகிறது. எந்த ஒன்றும் தானுக இயங்குமோ? இயங்காது. அதை இயங்க வைக்கும் சக்தி ஒன்றும் இருந்தாக வேண்டும்.

கார் ஒன்று ஓடுகிறது. அது நமக்குத் தானுக ஓடுவது போலத்தோன்றுகிறது. எனவே தான் அதை Auto-Mobile என்கின்ருேம். உண்மையில் அது தானுகவேவா ஓடுகிறது? இல்லை. அதை ஒட்டுவது அதன் எஞ்சினிலுள்ள எரிபொருளான பெட்ரோல் அல்லது டீஸல் ஆகும். இது மட்டுமல்ல, காரும் இருந்து, பெட்ரோலும் இருந்தால் மட்டும் போதாது. அதை இயக்க ஒரு காரோட்டியும் வேண்டும். உண்மை அறியாத பாமரன் ஒருவன் 'கார் ஓடுகிறது' என்று சொல்லி வியந்து நின்ருல் அதில் வியப்பேதுமில்லை. ஆனுல் உண்மையைத் தெரிந்த அறிவாளி 'கார் ஓடுகிறது' என்று சொல்லுகையில் கார், பெட்ரோல், காரோட்டி மூன்றையும் இணைத்தே காண்பான்.

'எல்லாம் இயற்கை' என்பர் நாஸ்திக வாதிகள். மாருக, 'எல்லாம் இறைவன்' என்பர் ஆஸ்திக வாதிகள். இயற்கை எது? இறைவன் யார்? இரண்டிற்கும் உள்ள தொடர்பு என்ன என்பதை அறிந்து கொள்ள விழையும் அர்ஜுனன் பகவானிடம் கேட்கிருன்.

ப்ரக்ருதிம் புருஷம் சைவ
க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞமேவ ச ‖
ஏதத்வேதிதுமிச்சாமி
ஞானம் ஞேயம் ச கேசவ ‖

'கேசவா! பிரகிருதி, புருஷன், க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன், ஞானம், ஞேயம் ஆகிய இவற்றை அறிந்து கொள்ள நான் விரும்புகிறேன்.'

அநேக பதிப்புகளில் இந்த சுலோகம் காணப்படுவதில்லை. இந்த சுலோகத்தையும் சேர்த்தால் கீதையில் மொத்த சுலோகங்கள் 701 ஆகிறது. சில அறிஞர்கள் இதை இடைச் செருகலாகக் கருதுகின்றனர். எப்படியாயினும் அர்ஜுனனின் இந்தக் கேள்விக்கு விளக்கமாக இந்த அத்தியாயம் அமைகிறது எனலாம். க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் என்பது இந்த அத்தியாயத்தின் பெயர். க்ஷேத்ரம் என்றால் எது, க்ஷேத்ரக்ஞன் என்றால் என்ன, அது போல் பிரகிருதி-புருஷன், ஞானம்-ஞேயம் இவற்றுக்கிடையேயான தொடர்பு என்ன என்பதை அர்ஜுனன் அறிந்துகொள்ள விரும்புகிறான். ஞானம் என்றால் அறிவு என்றும், ஞேயம் என்றால் அறியப்படுபொருள் என்றும் பொருள்.

சென்ற அத்தியாயத்தில் பக்தி யோகம் பற்றி, குறிப்பாக பகவானுக்குப் பிரியமான பக்தனின் லக்ஷணங்களைப் பற்றி விரிவாக பகவான் எடுத்துரைத்தார். அந்த பக்தன் எத்தகைய ஞானத்தைப் பெற்று விளங்க வேண்டும் என்பதற்குரிய பதில் இந்த அத்தியாயத்தில் தரப்படுகிறது.

அர்ஜுனனது கேள்விக்கு பகவான் பதிலளிக்கிறார்.

இதம் சரீரம் கௌந்தேய
க்ஷேத்ரமித்யபிதீயதே |
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு:
க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: ॥ 1

'குந்தியின் புதல்வா! இந்த உடல் க்ஷேத்திரம் எனப்படுகிறது. இதை அறிகிறவனை க்ஷேத்ரக்ஞன் என்று ஞானிகள் கூறுகிறார்கள்'

இந்த அத்தியாயத்தின் பெயரான க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞ விபாகயோகம் என்ற சொல்லில் வரும் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்ற இரண்டு வார்த்தைகள் எதைக் குறிப்பிடுகின்றன என்பதை இந்த சுலோகம் விளக்குகிறது. க்ஷேத்ரம் என்பது நமது உடலையும், க்ஷேத்ரக்ஞன் என்பது உடலினுள் இருந்து கொண்டு அதை அறிபவனையும் குறிக்கின்றன. கீதையின் முதல் அத்தியாயத்தின் முதல் சுலோகமே 'தர்ம க்ஷேத்ரே' என்ற வார்த்தையுடன்தான் துவங்குகிறது. க்ஷேத்ரம் என்ற சொல்லுக்குப் பொருள் பல உண்டு. வயல், இடம், களம் என்றெல்லாம் அது பொருள்படும்.

குடியானவன் வயலில் விதைகளை விதைக்கிறான். பயிருடன் சேர்ந்து களைகளும் முளைத்து வளருகின்றன. ஒரே பூமியில் நல்லதும் கெட்டதுமாகிய பயிரும் களையும் வளர்வது போல, நமது உடலாகிய களத்திலும் புண்ணியம் பாவம் ஆகிய இரண்டையும் நாம் அனுபவிக்கிறோம். அவரவர் கர்ம பலனை ஒவ்வொருவரும் அனுபவிக்கின்றனர். ஜீவர்களாகிய நமக்கு தர்ம க்ஷேத்திரமாக உடல் அமைகிறது. இந்த உடல் வெறும் ஜடப்பொருள். அது அசேதனம். அதனால் எதையும் அறியவோ உணரவோ முடியாது. அதற்குள்ளே உறையும் இச்சக்தி க்ஷேத்ரக்ஞன், அதாவது அறிபவன் எனப்படுகிறது. உடல் க்ஷேத்ரம், ஆன்மா க்ஷேத்ரக்ஞன் என்பது கருத்து.

சரீரத்தை நாம் ஒரு சோதனைச் சாலையுடன் ஒப்பிட்டால் ஆன்மாவை அந்த சோதனைச்சாலையினுள் பணி புரியும் விஞ்ஞானியுடன் ஒப்பிடலாம். சோதனைச் சாலை பெரிதாக இருந்து அதனுள்ளே விலைமதிப்பற்ற பல நுண் கருவிகளும் இருந்து, ஆனால் அவற்றைப் பயன்படுத்தவல்ல ஒரு விஞ்ஞானி இல்லையென்றால் அந்தச் சோதனைச் சாலைக்கு ஏதாவது புகழ் உண்டா? பெயர் உண்டா? கிடையாது. அதுபோல,உடல் அழகாகவும் திடமாகவும் இருந்து அதனுள் அதை இயக்கும் ஆன்மசக்தி இல்லையென்றால், அந்த உடலைப் பிணம் எனப் பழித்துத் தீயில் சுட்டுப் பொசுக்கி விடுகிறோமில்லையா? எனவே உடலுக்கான மதிப்பு ஆன்மாவிடமிருந்து வருகிறது. ஆனால் இந்த ஆன்மா அதி நுட்பமானது, பொறிபுலன்களுக்கு அப்பாற்பட்டது என்பதால் அதை அறிவதும் உணர்வதும் மிகக் கடினமாக இருக்கிறது. எளிதில் அதை உணர முடியாத காரணத்தினால் சாதாரணமக்கள் உடலையே ஆன்மா என்று எண்ணி மயங்குகின்றனர். ஆனால் உடல் வேறு, ஆன்மா வேறு. உடல் பஞ்சபூதங்களாலானது. அழிந்து போகக் கூடியது. நோய்களுக்கு இலக்காகக்கூடியது. ஆன்மா வோ பஞ்ச பூதங்களுக்கு அப்பாற்பட்டது, அழியாதது, மாற்றத்திற்கும், மறைவுக்கும் உட்படுத்தப்பட முடியாதது.

அணுவின் உள்ளே உள்ள புரோட்டான், எலக்ட்ரான் போன்றவை விஞ்ஞானியின் அறிவைக் குழப்புவது போன்று, ப்ரகிருதி, புருஷன் போன்றவை தத்துவ வாதியைக் குழப்புகின்றன. ஈதர், ரேடியோ அலைகள் முதலானவை எந்தப் பொருளையும் ஊடுருவிச் செல்ல வல்லவையானாலும் அவை அவற்றால் பாதிக்கப் படாமல் இருப்பதுபோன்று, ஆன்மா அனைத்திலும் வியாபித்து நின்று அவற்றால் பாதிக்கப்படாமல் இருக்கிறது.

விஞ்ஞானிகள் பலவகைப்படுவர். ரசாயன விஞ்ஞானி ரசாயன சோதனைச் சாலையை நிர்மாணிக்கிறான். பௌதிக விஞ்ஞானி பௌதிக சோதனைச் சாலையை அமைக்கிறான். இது போல பல்வேறு துறைகளைச் சேர்ந்த விஞ்ஞானிகளும் தங்கள் தங்கள் சோதனைகளுக்காக வெவ்வேறு சோதனைச்சாலைகளை அமைத்து ஆராய்ச்சி நடத்துகின்றார்கள். புறத்தே பார்ப்பதற்கு 'சோதனைச் சாலை' என்ற அளவில் எல்லாம் ஒரே மாதிரியாகத் தென்படினும், ஆழ்ந்து பார்த்தால் அவற்றிற்கிடையேயுள்ள வேற்றுமை புலப்படும். அதுபோலத் தாயின் கருப்பையில் தோன்றி வளரும் ஜீவன் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக இந்த உடல் எனும் சோதனைச் சாலையை தன்னுடன் இவ்வுலகினுள் கொணர்கிறான். ஒரு விஞ்ஞானி தன் துறையில் பெற்ற சிறப்பறிவு அவனது எதிர்காலச் செயல்களுக்கான ஸம்ஸ்காரமாக அமைகிறது. அதுபோல தனது முந்தைய செயல்களின் விளைவுகளுக்கேற்ப இவ்வுடலத்தை எடுத்து அதன் மூலம் சில குறிப்பிட்ட பணிகளை செய்து முடித்துப் பின்னர் அந்த உடலை விடுத்து மரணமடைகிறான். பின்னர் அடுத்த பிறவி அவனுக்கு வந்து வாய்க்கிறது.

(தொடரும்)

# திருமெய்யம்

திரு. டி. வெங்கடேஷ்,
திருவல்லிக்கேணி

சென்ற இதழ்த் தொடர்ச்சி

## ஸத்யரிஷியின் தவம்

இமயமலையின் நின்றும் வடபுறம் தாழ்வரையில் புஷ்பத்திரை நதிக் கரையில் சித்திரச்சிலை என்ற பாறை யருகிலுள்ள 'பத்திரவடம்' என்ற ஆலமரத்தினடியில் ஸத்தியதவர் என்ற முனிவர் தவம் செய்து வந்தார். அம்முனிவர் ஒரு நாள் ஸமித்துக்கள் கொண்டு வரவேண்டிச் சென்று ஸமித்துக்களை வெட்டும் போது வாளினால் தனது கைகளையும் வெட்டிக் கொள்ள, வெட்டப்பட்ட விரலானது சாம்பலாகி பறந்ததே யொழிய ஊன், எலும்பு, சதை ஒன்றும் காணப்படவில்லை. அதிசீக்கிரத்தில் அறுபட்ட விரல் முன்போல் ஆகிவிட்டது. இவ்வதிசயத்தைக் கண்ணுற்ற கின்னரஸ்திரீயும் புமானும் தேவலோகம் சென்று இந்திரனிடம் தெரிவித்தனர். இதையறிந்த இந்திரன் முனிவருடைய தேஜஸைக் காண விருப்பம் கொண்டு, தான் வேடனாகவும், இந்திரன் தம்பி உபேந்திரனாய் அவதரித்திருக்கும் விஷ்ணு பன்றியாகவும் மாறினர். முதலில் பன்றி முனிவருடைய ஆசிரமத்தை அடைய வேடன் தொடர்ந்து ஓடினன். வேடனை இந்திரன் முனிவரிடம் அணுகி, பன்றியின் அடிச்சுவடுகள் ஆசிரமத்திற்குள் இருக்கிற படியால் அதைத் தனக்குக் காட்டிக் கொடுக்கும்படி வேண்டினன். முனிவரும் "கண்டதாகச் சொன்னால் பன்றி உயிரிழக்க நேரிடும்; காணாததாகச் சொன்னால் வேடனுடைய குடும்பம் பசியினால் உயிரிழக்கும்" என்று கருதி ஸமயோசிதமாக "உலகத்தில் பார்ப்பதற்காக கண்களும், சொல்லுவதற்காக நாவும் ஏற்பட்டிருக்கிறது. ஆனாலும் சொல்லுகிறவன் யார்? காண்கிறவன் யார்? கேட்கிறவன் யார்? நீ யார்? இவையெல்லாம் நீயே நன்றாக அறிந்து கொள்" என்றார். முனிவருடைய தர்மத்தை யறிந்து உபேந்திரனும், இந்திரனும் தங்களுடைய வேடத்தைக் களைந்து முனிவருக்கு ப்ரதியக்ஷமானார்கள். முனிவரும் பகவத் ரூபமானது எப்பொழுதும் இதேபோல் தனக்கு காட்சியளிக்க வேண்டும் என்று ப்ரார்த்தித்தார். எம்பெருமானும் அதற்கு இசைந்து தவத்தின் பயனை எளிதில் தரக்கூடிய ஸத்திய க்ஷேத்திரத்தில் உன்னோடு வாசம் செய்கிறேன் என்று சொல்ல, முனிவரும், தமக்குத் தவம் பெருகும்படி செய்த ஆலமரம், சித்திரச்சிலை என்ற பாறை, புஷ்பபத்திரை நதி இவைகளை பிரிய வொண்ணாமல் இருக்க, ஐராவதம் என்ற இந்திரனுடைய யானையின் உதவி கொண்டு முனிவர் இவைகளுடன் ஸத்திய க்ஷேத்ரம் வந்தடைந்தார். இவ்விதம் சாக்ஷுஷமனுவின் காலத்தில் இரண்டு சதுர்யுகத்தின் மேல், வைகாசி சுக்லபக்ஷம், பஞ்சமி திதி, ஞாயிற்றுக்கிழமை, பூச நக்ஷத்திரம், ஸித்த நாம யோகம், பாலவகரணம், ஸிம்ஹ லக்னம்கூடிய சுபதினத்தில் பகவான் ஸத்ய க்ஷேத்திர மடைந்தார்.

## புரூரவஸ் சக்ரவர்த்தியின் கதை

புரூரவஸ் சக்ரவர்த்தி சுத்தஸத்வ குணத்தையுடையவனாய்க் கொண்டு, விஷ்ணுவுக்கு மனத்தாலே இம்மூவுலகங்களையும் பூஜா வஸ்துக்களாகக் கொண்டு ஆராதித்து வந்தான். பகவானும் அவ்வரசனுக்கு அனுக்கிரகம் செய்யக் கருதி கருடன் மேலேறி ஸத்திய க்ஷேத்திரம் வந்தடைந்தான். பகவான் தன் வடிவை மறைத்து, பன்றியின் வடிவு கொண்டு, பின் வந்த விஷ்வக்ஸேனர் என்ற ஸேனைத் தலைவர் முதலிய எல்லோரும் பன்றி வடிவு கொண்டு, புரூரவஸ் சக்ரவர்த்தியின் எல்லைக்குட்பட்ட நிலத்தில் பயிர்களையும், செடி கொடிகளையும் அழித்தார்கள். இது கண்ட ஜனங்களெல்லாம் அரசனிடம் சென்று முறையிட அரசனும் வேடர்களைக் கூப்பிட்டு பன்றிக் கூட்டங்களை (வராஹங்களை) கொன்று விடும்படி கட்டளையிட்டான். வேடர்கள் அனைவரும் வராஹங்களால் அடிக்கப்பட்டதையறிந்து புரூரவஸ் சக்ரவர்த்தி தானே அவைகளை வேட்டையாடச் சேனைகளுடன் புறப்பட்டான். சேனைகள் யாவும் வராஹங்களால் அடிக்கப்பட்டு ஓடிவிட்டன. இவ்விதம் தன் படை முழுவதும் ஓடிவிட்டபடியால், கோபம் கொண்ட ராஜா வராஹத் தலைவன்மேல் கிட்டி பாணங்கள் பொழிந்தான். வராஹ தலைவனும் கர்ஜித்து ராஜாவின் வில்லைப் பிடித்து இழுத்து தன் மூக்கினால் வில்லைப் பிடித்துக் கொண்டது. ராஜா துரிதனாய் அந்த வராஹத்தை நெருங்கி வாளால் அதன் மார்பில் வெட்டினான். மார்பில் பட்ட காயத்திலிருந்து ரத்தம் சிந்த வராஹமானது உடனே கையில் அகப்படாமல், ஒருவிடத்தில் திகைத்து நிற்பதும், பிடிக்கப் போகும் போது ஓடிவிடுவதுமாக ஸத்தியகிரி வந்து சேர்ந்தது. நெடுந்தூரம் ஓடியதால் களைப்புற்ற ராஜாவைக் கண்ட வராஹம் அருகிலுள்ள குகைக்குள் சென்றது. அரசனும் குகைக்குள் செல்ல, அங்கிருந்த பாம்பு அரசனைச் சுற்றிக் கொள்ள, அரசனும் தன்னுடைய பலத்தினால் பாம்பிடமிருந்து விடுவித்துக் கொண்டு குகையினின்றும் வெளியே வந்து விட்டான். வராஹ ரூபமான

(31-ம் பக்கம் பார்க்க)

# ★ கண்ணபிரான் திருவிளையாடல்கள் ★

## வில்லிபுத்தூராழ்வார் வரலாறு :

இராமாயணத்தை வால்மீக முனிவரும், மகாபாரதத்தை வேத வியாசரும் வடமொழியில் இயற்றியருளினார்கள். இவ்விரண்டில் இராமாயணத்தைக் கம்பரும், மகாபாரதத்தை வில்லிப்புத்தூராழ்வாரும் செந்தமிழில் இயற்றி அழியாப் பெரும் புகழ் பெற்றார்கள். இவ்விரு நூல்களும் உலகில் சிறந்து விளங்கும் எல்லா மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதிலிருந்து இவற்றின் அளப்பெரும் பெருமையினை அறிந்து கொள்ளலாம். மகாபாரதத்தை விருத்தமென்னும் ஒண்பாவால் செஞ்சொல்லும், நுண்பொருளும், தொடை நயமும் ஓசையின்பமும் அமையப்பாடியருளிய வில்லிப்புத்தூராழ்வாரென்னும் பெரும் புலவர் மறையவர் மரபில் திருமுனைப் பாடி நாட்டில் சனியூரில் அவதரித்தவர். தமிழில் பிழைபடப் பாடும் புலவர்களோடு வாதம் செய்து அவரது காதுகளை அறுத்துத் தமிழுக்கு நேரவிருந்த குறைகளைப் போக்கியருளினார். இதனைக்

'' குறும்பியள வாக்காதைக்
குடைந்து தோண்டி
எட்டின மட்டறுப் பதற்கோ
வில்லியில்லை ''

என்பதனால் இனிது விளங்கும். கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வில்லிப்புத்தூராழ்வாரை ''வில்லி சொல்லை வெல்லவல்ல பெருமாளே'' என்று விருப்பத்தோடு வியந்து திருப்புகழ் பாடியருளிய அருணகிரிநாதரே கூறுவாரெனின் நம்மால் இவர் புகழை அளந்தறிய இயலுமா? பாரதத்தில் முதல் பத்துப் பருவங்களை வில்லிப்புத்தூரார் பாடியருளினார். வில்லிபாரதம் என்னும் பெயரால் அனைவராலும் பயிலப்பட்டு வருவதும் இந்நூலேயாகும்.

## மகாபாரதச் சுருக்கம் :

சிவபெருமான் மதுரைப் பெருநகரில் கோயில் கொண்டு 64 திருவிளையாடல்களைப்புரிந்தாரென பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணமென்னும் நூல் கூறும். பாம்பணைப் பள்ளிகொண்ட திருமாலும் பத்தவதாரங்கள் எடுத்து உலகில் அதர்மங்கள் தோன்றிய போது அவதாரம் செய்து தருமத்தை நிலை நிறுத்தினார் என்பதைப் புராணங்கள் வாயிலாக நாம் அறிகிறோம். திருமால் ஸ்ரீகண்ணபிரானாக அவதரித்து கொடியவனாகிய துரியோதனனையும் அவன் தம்பிமார்கள் நூறு பேர்களையும் சேனையையும் பாண்டவர்கள் மூலம் அழித்துப் பூமிபாரம் தீர்த்துத் தருமத்தை நிலை நாட்டியதை விளக்குவதே மகாபாரதத்தின் வரலாற்றுச் சுருக்கமாகும். இப்பாரதத்தில் ஸ்ரீகண்ணபிரானின் திருவிளையாடல்களை நூல் முழுவதும் படித்தின்புறலாம். எல்லா மன்னர்களும் போற்றுமாறு பேரரசமைத்துப் பெருமித வாழ்வு வாழும் தரும புத்திரரின் வாழ்வைக் கண்டு பொறாமை கொண்ட துரியோதனன் பாண்டவர்களை வஞ்சனையாக வரவழைத்துச் சூதாடி அரசைக்கவர்ந்து கொண்டான். பின் பெரியோர்கள் செய்த ஒப்பந்தப்படி 12 ஆண்டுகள் காட்டிலும் ஓர் ஆண்டு வேற்றுருவிலும் மறைந்து வாழ்ந்து 13 ஆண்டுகள் கழிந்து நாடு திரும்பினால் அரசை ஒப்படைப்பதாகக் கூறினான். 13 ஆண்டுகள் கழிந்து திரும்பிய பாண்டவர்கள் துரியோதனனிடம் தம நாட்டைக்கொடு என்ற போது நாட்டைக் கொடுக்க மறுத்தான். பாண்டவர்களுக்காக ஸ்ரீ கண்ணபிரான் தூது சென்றார். ஸ்ரீ கண்ணபிரான் எவ்வளவு எடுத்துக் கூறியும் துரியோதனன் பாண்டவர்களது நாட்டைக் கொடுக்க மறுக்கவே பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பெரும் போர் மூண்டது. இதுவே பாரதப் போராகும். இப்போர் 18 நாட்கள் நடைபெற்றன. 18-ஆம் நாள் போரில் வீமனது கதையினால் துரியோதனன் மாண்டான். இப்போரில் ஸ்ரீ கண்ணபிரான் பாண்டவர் பக்கமிருந்து வெற்றியைத் தேடித் தந்தருளினார். தரும புத்திரர் இழந்த நாட்டைப் பெற்று பழையபடி சீருடன் வாழ்ந்த வரலாற்றை விளக்குவதே மகாபாரதமாகும்.

புலவர். மு. மணி, எம்.ஏ.,
வேலூர்.

## ஸ்ரீ கண்ணபிரான் திருவிளையாடல்கள் :

இளம் வயது முதலே பாண்டவர்கள் மீது பொறாமை கொண்ட துரியோதனன் அவர்களைக் கொல்ல பல சூழ்ச்சிகளைச் செய்து வந்தான். ஸ்ரீ கண்ணபிரான் அவனுடைய சூழ்ச்சிகள் எல்லாவற்றையும் முறியடித்துப் பல திருவிளையாடல்களைப் புரிந்து நீதியை நிலைநாட்டினார். தரும புத்திரரே எம்பெருமானின் திருவிளையாடல்களைப் புகழ்ந்து பாராட்டியி

ருப்பதை பாரதத்தில் கண்ண பருவத்தின் வாயிலாக அறியலாம்.

பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் நடந்த போரில் ஸ்ரீ கண்ணபிரான் பாண்டவர் பக்கமிருந்து அருச்சுனனுக்குத் தேரோட்டினர். பதினேழாம் நாள் போர் தொடங்கியது. கடந்த பதினறு நாட்களில் நடந்த கடும் போரில் இருதிறத்துப் படைகளிலும் பெருஞ்சேதம் ஏற்பட்டது. அதனல் கலங்கிய தருமர் ஸ்ரீ கண்ணபிரானை நோக்கி 'இன்று நடக்கும் போரில் கதிரவன் மகன் கர்ணன் வானுலகையடைந்து விடுவானு' என வினவினர். நீல நிற மேனியனும், திருமகள் கேள்வனும், அன்பர்களுக்கு உற்றுழி உதவும் துணையாக இருப்பவனுமாகிய ஸ்ரீ கண்ணபிரான் தரும புத்திரரைப் பார்த்து 'இன்றைய போரில் அருச்சுனன் விடும் அம்பால் கர்ணன் இறந்து போவான், வீமனது கதையினல் நாளை துரியோதனனும் இறந்து போவான். பின்னர் அத்தினபுரியும் இவ்வுலகமும் உனக்கே உரியனவாகும்' எனத் திருவாய் மலர்ந்தருளினர். அதைக் கேட்ட தருமர் கவலை நீங்கி ஸ்ரீ கண்ணபிரானைப் பாராட்டினர். எங்கள் மானத்தையும், ஆண்மையையும், புகழையும் காத்து நிலை நிறுத்த வல்லவர்கள் உன்னையன்றி இவ்வுலகில் வேறு யாரும்இல்லை. துரியோதனன் செய்து வந்த சூழ்ச்சிகளில் அகப்பட்டு அழிந்து போகாதவாறு எங்களைக் காத்து வந்ததேயன்றி எங்களுக்கு உரிய அரசையும் இன்று கொடுத்தருளினுய். கங்கையில் சிறுவர்களாயிருந்த போது வீமனைக் கொல்ல துரியோதனன் நீர் விளையாடுமிடத்தில் நிறுத்தி வைத்திருந்த கூரிய கழுமரங்களின் மீது விழுந்து மாண்டு போகாதவாறு வண்டாக வந்து கழுமரத்தின் மீதமர்ந்து காத்தருளினுய். அரசர்கள் பேரவையில் செய்வதறியாது நாங்கள் கலங்கி நிற்கும் வேளையில் திரௌபதி தன்னுடைய நாணத்தையும், ஆடையையும் இழந்து விடாதவாறு ஆடை கொடுத்துக் காத்தருளினுய். துரியோதனன் வஞ்சக எண்ணத்துடன் வேண்டிக் கொண்டதற்கு இணங்கித் தம்முடைய சீடர்களோடு மிக்க பசியுடன் எங்களிடம் வந்த துருவாச முனிவரின் கொடிய பசியையும், அவரால் எங்களுக்கு நேரவிருந்த சாபத்தையும் போக்கியருளினுய். எங்களுக்காக துரியோதனனிடம் தூது சென்ருய். விதுரன் தன் வில்லை இருதுண்டுகளாக வெட்டி யெறியுமாறு செய்தாய். இந்திரனை ஏவிக் கர்ணனின் கவச குண்டலங்களைப் பெற்றுக் கொண்டு வருமாறு செய்தாய். அமாவாசையை முதல் நாளே வருமாறு மாற்றி அராவானுக்கு அறிவுரை வழங்கி எங்களுக்கே அவன் களப்பலியாகுமாறு செய்தாய். எங்கள் பால் கருணை கொண்டு அருச்சுனனுக்குத் தேரைச் செலுத்தி வருகின்ருய். போரிடாது கலங்கி நின்ற அருச்சுனனுக்குக் கீதையை உபதேசித்தாய். துரியோதனனுக்கு உரைத்த உறுதி மொழியை மறந்து போர்க்களத்தில் சக்கரப்படையை எடுத்துச் சங்கை முழங்கினுய். எங்கள் பாட்டனர் இறந்து போகுமாறு சிகண்டி முற்பிறப்பிற் செய்த தவத்தின் பயனை அவர்மீது செலுத்தினுய். பகதத்தன் எறிந்த வேலை உன் மார்பில் ஏற்று அருச்சுனனைக் காத்தருளினுய். அபிமன்யு இறந்து போனபோது நெருப்பில் விழுந்து அருச்சுனன் மாளாதவாறு முனிவரைக் கொண்டு தடுத்தருளினுய். ஓர் இரவில் அருச்சுனன் பொருட்டுக் கயிலை சென்று மீண்டாய். சுதாயு என்பவன் அருச்சுனன் மார்பை நோக்கி எறிந்த தண்டுப் படையை உன் மார்பில் ஏற்று அவன் இறக்கும் படி செய்தாய். சூரியனை மறைத்து இருள் சூழுமாறு செய்து அபிமன்யுவைக் கொன்ற சயத்திரதனை அருச்சுனன் கொல்லுமாறு செய்தருளினுய். அசுவத்தாமன் நாராயணுஸ்திரத்தை எய்த போது நாங்கள் இறந்து போகும் நிலைமை எய்தியதை யறிந்து ஊர்திகளினின்றும் இறங்கிப் படைகளைக் கீழே வைத்துவிட்டு வெறுங்கையோடு நிற்கச் செய்து எங்களைக் காத்தருளினுய். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் செய்தருள்கின்ற பெருமானே. அரசர்களும், தேவர்களும் உன்னுடைய திருவிளையாடல்களை அறியார் எனின் எளியேனுகிய என்னுல் அறிந்து கொள்ள முடியுமோ' என்று கூறி ஸ்ரீ கண்ணபிரானின் திருவடிகளில் தன்னுடைய முடி படியுமாறு விழுந்து தரும புத்திரர் வணங்கினர். இதனை விளக்குவது,

ஏவருஞ் சாப பண்டிதன் புதல்வ
னேவிய வேலினுல் யாங்கள்
வீவருந் தன்மை யறிந்து வாகனமும்
விறற்படைகளு மொழித்திட்டாய்
மூவருமொருவ ராகிநின் றருளு
மூர்த்தியே பார்த்திவர் பலருந்
தேவருமுணரார் நின்செயலென மால்
சேவடிகளின் முடி சேர்த்தான்.

என்ற அழகிய பாடலாகும். எனவே பாண்டவர் பக்கமிருந்து துரியோதனின் பல சூழ்ச்சிகளை முறியடித்து அதர்மத்தை ஒழித்துத் தர்மத்தை நிலைநாட்ட ஸ்ரீ கண்ணபிரான் செய்த திருவிளையாடல்கள் அளவிடற்கரியது. வணங்குகின்ற அடியார்களுக்கும் வரும் துன்பங்களைப் போக்கிப் பேரின்ப வீட்டினை யளிக்க வல்ல ஸ்ரீ கண்ணபிரானை நாமும் சேவித்து உயர்வடைவோமாக.



**இலக்கியப் பகுதி**

# கபிலர் முதல் கம்பர் வரை

கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்த காலம் அது. இரவெல்லாம் வடமொழிப் புலவர்களைத் துணையாகக் கொண்டு வால்மீகியின் இராமாயணத்தை ஆராய்ந்து, நாள் முழுவதும் தனது இராமகாதையைக் கம்பர் எழுதினுர் என்பர்.

அப்போது, கம்பன் கோசல நாட்டின் வளங்களை, பால காண்டத்தில் எழுதிக் கொண்டிருந்தான். கோசல நாட்டின் இயற்கை வளத்தையும், செழிப்பையும் கற்பனை செய்யும் பொழுது, கவிஞனின் கண்முன் சோழ நாட்டின் செழுமைதான் வருகின்றது.

கற்பனைச்சிறகுதானே கவிஞனுக்கு இறைவன் தந்த பரிசு. கற்பனைச் சிறகடித்துப் பறக்கக் கவிஞனுக்குத் தனிமை தேவை; இயற்கையின் அரவணைப்பும் தேவை தான். கம்பன், கோசல நாட்டின் வளங்களைக் காவியத்தில் உருவாக்க, வயல் வெளியின் வரப்புகளில் நடந்து கொண்டிருந்தான்.

அப்போது, நீலவானத்தைக் கரு முகில்கள் மூடி இருந்தன. மழை பெய்வதற்கான அறிகுறியோடு வானம் முழுக்கமிட்டுக் கொண்டிருந்தது. சோலையில் இருந்த மயில்கள் தமது தோகையை விரித்து ஆடின. வயல்களில் தாமரை மலர்கள் மலர்ந்து நிற்கின்றன. குவளை மலர்களோ தமது இதழ்களை விரித்து மலர்ந்திருக்கின்றன. வயல்களில் நிற்கும் நீரானது, காற்றுப்பட்டு அலை வீசிக்கொண்டிருக்கிறது. அம்மலர்களைச் சுற்றிவரும் வண்டுகளோ யாழின் இசையைப் போல ஓசையிட்டுக் கொண்டுள்ளன. இக்காட்சி கவிஞன் மனதில் பதிகின்றது. இக்காட்சியினையே கோசல நாட்டின் வளமாக உருவாக்குகிறான் கம்பன்.

'' தண்டலை மயில்கள் ஆடத்
தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்
வீற்றிருக்கும் மாதோ '

(கம்ப. பால: 35)

இக்காட்சியைக் கவிஞன் ஒரு நாடக அரங்காகவே காண்கிறான். சோலையில் ஆடும் மயில்கள் நாடக மகளிராகக் காட்சியளிக்கின்றன. மேகங்களின் இடியோசை மத்தளத்தின் ஓசையாகக் கேட்கிறது. வயல்களில் மலர்ந்திருக்கும் தாமரை மலர்கள் சிவந்த விளக்குகள் போலக் காணப்படுகின்றன. வயல்களில் நிற்கும் நீர், அலை வீசுவதால் திரைச் சீலையைப் போல் காணப்படுகிறது.

இக்கற்பனைக்கான கரு, கம்பனுக்கு எங்கிருந்து கிடைத்தது என்று காண்போம். கம்பனுக்கு முன்னர் தோன்றிய காப்பியம் திருத்தக்க தேவர் இயற்றிய சீவகசிந்தாமணியாகும். இந்நூல் சிறந்த காப்பிய இலக்கணங்கள் பொருந்த இயற்றப்பட்டதாகும்.

ஏமாங்கத நாட்டுத் தலைநகரான இராசமாபுரியில் இருந்து ஆட்சி செய்கிறான் சச்சந்தன். இம்மன்னன் தனது மனைவியாகிய விசயையுடன் உல்லாசமாகக் காலம் கழிக்கிறான். நாட்டின் ஆட்சிப் பொறுப்பினைத் தனது அமைச்சன் கட்டியங்காரன் என்பவனிடம் ஒப்படைத்து விடுகிறான். கட்டியங்காரனே, வஞ்சக எண்ணம் கொண்டு, மன்னனையே கொல்லச் சதி செய்கிறான். அப்போது விசயை கருவுற்றிருக்கிறாள். எனவே, சச்சந்தன் பறக்கும் மயில் பொறி ஒன்றினை உண்டாக்கச்செய்து தந்திரமாக அவளை மட்டும் அதில் ஏற்றி வேறிடம் அனுப்புகிறான்.

விசயையை ஏற்றிச் சென்ற மயில் பொறி ஒரு சுடுகாட்டில் இறங்குகிறது. அங்கு ஆண் மகவு ஒன்றினைப் பெற்றெடுக்கிறாள். தனது குழந்தை சுடுகாட்டில் பிறக்காமல், அரண்மனையில் பிறந்திருந்தால் எவ்வளவு சிறப்பாக இருந்திருக்கும் என்று நினைக்கிறது தாயின் மனம். தனது குழந்தை அரண்மனையில் பிறந்திருந்தால், அந்த மகிழ்ச்சியின் அடையாளமாக மத்தளங்கள் இசைக்கப் பட்டிருக்கும். சிறப்பான விளக்குகள் ஏற்றப்பட்டிருக்கும். நடன மேடைகள் அமைக்கப்பட்டு, சிறப்பு நடன நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கும். இவற்றைப் பாராட்டப் பலர் இருந்திருப்பார்கள் அல்லவா?

புலவர் பா. அன்பரசு, எம்.ஏ., பி.எட்.,
சேலம்-2.

ஆனால், இச்சுடுகாட்டில் நிகழ்வதென்ன? சுடுகாட்டில் உள்ள நரிகளின் ஊளையிடும் சப்தம் மத்தளத்தின் ஓசையாகக் கேட்கிறது. இறந்தவர்களைச் சுடும் நெருப்பு விளக்கொளியாக வீசுகிறது. அந்தச் சுடுகாட்டின் கல்லறைகளின் மேல் பேய்கள் ஆடுவது நடனமாகக் காணப்படுகிறது. இந்நடனத்தைப் பாராட்டுவோர் கூகைகளே! புலவர் கற்பனையைப் பாருங்கள்.

'' வெவ்வாய் ஓரிமுழுவாக விளிந்தார்
ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்டு உயர் அரங்கின்
நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வாறுகிப் பிறப்பதோ இதுவோ
மன்னர்க்கியல் வேந்தே ''

(சீவக - நாமகள் - 5)

இவ்வாறுகூறி அவள் அழுவதாகத் திருத்தக்க தேவர் கூறுகிறார். இந் நாடக மேடைக் காட்சி, கம்பர், திருத்தக்க தேவர் ஆகிய புலவர்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வாழ்ந்த சங்கப் புலவர் கபிலரால் தீட்டப்பட்டுள்ளது. அப்பாடல் அகநானூற்றில் 82-ஆம் பாடலாகக் காணப்படுகிறது.

கபிலர் பெருமான் ஒரு நாள் குறிஞ்சி நிலத்தின் வழியே பயணம் செய்து கொண்டிருக்கிறார். மலைச் சாரலில் நீண்டு வளர்ந்துள்ளன மூங்கில்கள். அவை வண்டுகளால் ஆங்காங்கே துளைக்கப்பட்டுள்ளன. அதன் வழியே காற்று நுழைவதால் அதிலிருந்து வரும் ஓசை புல்லாங்குழலின் ஓசையாகக் கேட்கிறது. மலையில் இருந்து விழும் அருவியின் 'தட தட' என்னும் ஓசை மத்தளத்தின் ஓசையாகக் கேட்கின்றது. மலைச்சாரலில் பூத்திருக்கும் மலர்களைச் சுற்றிவரும் வண்டுகள் எழுப்பும் ஓசை கேட்டுக் கொண்டிருக்கிறது. அக்குறிஞ்சி நிலத்தில் ஆடும் மயில்கள் விறலிப் பெண்டிராகக் காணப்படுகின்றன. ஆமாம், இவற்றையெல்லாம் காணவும், கேட்கவும் பார்வையாளர்கள் வேண்டுமே. பார்வையாளர்களாகக் குறிஞ்சி நிலத்திலுள்ள குரங்குகள் காணப்படுகின்றன. அப்பாடல்,

'' ஆடுஅமைக் குயின்ற அவிர்துளை
மருங்கின்
கோடை அவ்வழி குழல்இசை ஆக,
பாடுஇன் அருவிப் பனிநீர் இன்னிசை
தோடுஅமைமுழவின் துதைகுரல் ஆக,
கணக்கலை இகுக்கும் கடுங்குரல்
தூம்பொடு
மலைப்பூஞ்சாரல் வண்டு யாழ்ஆக,
இன்பல் இமிழ்இசை கேட்டுக் கலி
சிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்க,
கழைவளர், அடுக்கத்து இயலி ஆடும்
மயில்
நனவுப்புகு விறலியின் தோன்றும்,''
(அகம்-82)

கபிலர், தாம் கற்பனை செய்த நடன மேடையில் குழல், மத்தளம், ஊது கொம்பு, யாழ், ஆடல் மகளிர், பார்வையாளர்கள் ஆகியோரைக் கற்பனைச் செய்து காட்டுகிறார். மலைச் சாரலையே மேடையாக்கினார். விளக்கு களைக் காட்டவில்லை. இவருக்கு அடுத்தபடியாக நடன மேடையைக் கற்பனை செய்த திருத்தக்க தேவரோ, மத்தளம், விளக்கு, நடன மேடை, பார்வையாளர் ஆகியவற்றினை மட்டுமே கற்பனை செய்தார்.

ஆனால் கற்பனையின் சிகரத்தினையே தொட்டுவிட்ட கவிப் பேரரசன் கம்பனோ, தனது நடன மேடையை ஆடல் மகளிர், விளக்கு, மத்தளம், பார்வையாளர், மகரயாழ் ஆகியவற்றுடன் உருவாக்கியதோடு கபிலரும், திருத்தக்க தேவரும் தமது கற்பனையில் காட்டாத திரைச் சீலையைக் கற்பனை செய்து காட்டி இருக்கிறான். மருத நிலத்தின் வயல்களில் காற்றினால் அசையும் நீரினையே திரை சீலையாகக் காட்டியுள்ள திறம் கம்பனுடைய கற்பனை வளர்ச்சிக்குத் தக்க சான்றாகும். ★

நான்கு வேதங்கள் எல்லோராலும் அறியப்பட்டனவைகளே. இந்த நான்கு வேதங்களுக்கும் உபவேதங்கள் என்று சில இருக்கின்றன. அதாவது: ருக்வேதத்திற்கு உபவேதம் ஆயுர்வேதம் (வைத்யம்), யஜுர்வேதத்திற்கு உபவேதம் தனுர்வேதம்; ஸாம வேதத்திற்கு உபவேதம் காந்தர்வவேதம் (ஸங்கீதம்), அதர்வ வேதத்திற்கு உபவேதம் சிற்ப சாஸ்திரம். ஆனால் இவைகளை வேதம் என்றே முன்னோர்கள் கூறிவந்தார்கள். சிற்பக்கலைதான் சிற்ப சாஸ்

# சிற்பக் கலை

திரம் என்று கூறப்படுகிறது. இந்த சிற்ப சாஸ்த்ரத்திற்கு வாஸ்து சாஸ்த்ரம், ஸ்தாபத்ய சாஸ்த்ரம் என்றும் பெயர்கள் உண்டு. நாளடைவில் இவைகளையே வாஸ்து சாஸ்த்ரம், சிற்ப சாஸ்த்ரம், சித்ரலேக்ய சாஸ்த்ரம் (எழுதுவது) என்ற பெயர்களில் வழங்கி வருகிறார்கள். சிலர் வாஸ்து சாஸ்த்ரம் சிற்பசாஸ்த்ரத்திலேயே அடங்கி விடுகிறது என்று கூறுகிறார்கள். ஆனால் தற்கால ரீதியில் இரண்டும் ஒன்று என்று ஒப்புக்கொள்வது அவ்வளவு சுலபமல்ல. மேலும் விக்ஞான வளர்ச்சியில் எல்லாமே தனித்தன்மை வாய்ந்தது எனலாம். இவைகளை இவ்விதமாகப் பிரிக்கலாம்.

வாஸ்து சாஸ்திரம் = வீடு, அரண்மனை, கோயில் முதலியன கட்டுவித்தல்.

சிற்பசாஸ்த்ரம் = பொம்மை, கற்சிலை விக்ரஹம் பிரதிமை முதலியவை செய்வித்தல்.

சித்ரசாஸ்த்ரம் = கையினால் எழுதுவது, வர்ணம் தீட்டுவது, நிழற்படம் பிடிப்பது முதலியவைகளாகும்.

இப்பொழுது சிற்பக்கலையைப் பற்றி கொஞ்சம் பார்ப்போம். சிற்பக்கலை என்றால் பிரதிமைகள், பொம்மைகள், விக்ரஹங்கள் முதலியவைகளைச் செய்யும் முறையை விளக்கும் நூல் என்று பொருளாகும். பிரதிமை-விக்ரஹங்கள் இவைகள் பலவிதமானவை. உருவவழிபாட்டு முறைக்கு பிரதிமைகள்-விக்ரஹங்கள் முக்யமானவைகள். பொதுவாக பிரதிமை-விக்ரஹ வழிபாட்டு முறை சாதாரணமக்களுக்கே ஏற்பட்டவை.

शिवमात्मनि पश्यन्ति प्रतिमासु न योगिनः ।
अज्ञानां भावनार्थाय प्रतिमाः परिकल्पिताः ॥

என்று கூறப்பட்டுள்ளது.

''யோகி முதலானவர்கள் சிவனைத் தன் ஆத்மாவிலேயே பார்த்துக் கொள்கிறார்கள். ஸாதாரண மக்களுக்காகவே பிரதிமைகள் ஏற்பட்டுள்ளன''

பிரதிமைகள் கல், உலோகம், கண்ணாடி, மண், காகிதம் முதலான பொருட்களைக்கொண்டு செய்யலாம். கல்லில் பிரதிமைகள் செய்வதற்கு முக்யமாக ஸம்ஸ்கிருத அறிவு இன்றியமையாததாகும். பொதுவாக இம்மாதிரியான நூல்கள் பெரும்பாலும் வடமொழியிலேயே காணப்படுகின்றன.

முதலில் கல்லில் விக்ரஹம் செய்வதற்குக் கல்லை முதலில் பரீக்ஷிக்கவேண்டும். கற்களில் ஆண், பெண் என்று இரண்டு விதமான பேதங்கள் இருக்கின்றன. மேலும் கல்லைத் தேர்ந்தெடுக்கும்போது சில மந்திரங்களை உச்சரிக்க வேண்டுமென்று ஸமராங்கண ஸூத்ரதார வாஸ்து சாஸ்த்திர நூலில் கூறப்பட்டுள்ளது.

मन्त्रेणानेन चैतासामाभिषेकं समाचरेत् ।
हिरण्यवर्णाः पावन्यः शुचयो दुरितच्छिदः ॥

என்று.

சிற்பிகளுக்கு இலக்கணம் கூறும் பொழுது ஸமராங்கண வாஸ்து சாஸ்த்ர நூல் கீழ்வருமாறு கூறுகிறது.

अशास्त्रज्ञमकर्मज्ञं स्थपतिं यः प्रयोजयेत् ।
न तस्य वस्तुसिद्धयेत सिद्धमप्यसुखावहम् ॥

''எந்த ஸ்தபதிக்கு சாஸ்த்ர ஞானமும், தொழிலில் நல்ல புலமையும் இல்லையோ, அவனால் செய்யப்படும் சிற்பம் தகுதியற்றதாகிவிடும்'' என்று.

வாஸ்து சாஸ்த்ரத்தில் யாகத்திற்கு வேண்டிய குண்டங்கள், மேடைகள் இவைகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. ஸமராங்கண சாஸ்த்ரமென்ற நூலில் ஸ்தபதிக்கு இலக்கணம் கூறும் போது,

शास्त्रं कर्म तथा प्रज्ञा शीलञ्च क्रिययान्वितम् ।
लक्ष्यलक्षणयुक्तार्थशास्त्रनिष्ठो नरो भवेत् ॥
समुद्रं गणितञ्चैव ज्योतिषं छन्द एव च ।
शिराज्ञानं तथा शिल्पं यन्त्रकर्मविधिस्तथा ॥
(2–3)

என்று கூறப்பட்டுள்ளது.

திரு. டி. ஜி. அனந்தசுப்ரமண்யம்,
திருப்பதி.

இங்கே ஸ்தபதி என்ற சொல் மரம், கல், உலோகம், மண் முதலியவைகளைக் கொண்டு பிரதிமைகள், விக்ரஹங்கள் செய்யும் தொழிலாளியைக் குறிக்கும்.

புராணங்களில் பிரதிமைக்கு இலக்கணம் காணப்படுகிறது. மத்ஸ்ய, அக்னி ஸ்காந்த, கருட, லிங்க, பவிஷ்யத், விஷ்ணு, விஷ்ணு தர்மோத்தர முதலான புராணங்களில் காணலாம்.

லிங்கபுராணத்தில் லிங்கலக்ஷணம், குண்டாதி பிரமாணம், அதிவாஸன விதி, பிரதிஷ்டாபிரயோகம், தேவதாமானம் முதலிய விஷயங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

அக்னிபுராணத்தில் விஷ்ணுவின் பன்னிரண்டு உருவங்கள், கூர்மம் முதலான பத்து அவதாரங்களின் லக்ஷணங்கள், சாளக்ராம லக்ஷணங்கள் முதலானவை காணப்படுகின்றன.

ஆகமங்களிலும் பிரதிமை, விக்ரஹம் இவைகளின் இலக்கணங்களைப்

பற்றிக் கூறப்பட்டுள்ளன. காவிகாகமம் என்ற நூலில் 75-வது படலத்தில் வாஸ்துசாஸ்த்ரத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. தந்த்ரங்களான சைவ - வைஷ்ணவ - சாக்த - பாஞ்சராத்ர முதலான நூல்களில் பலவித பிரதிமாபிரமாணம், நிர்மாணம் முதலியவைக் கூறப்பட்டுள்ளன.

சிற்பக்கலையை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். தென்னாட்டுச் சிற்பம், வடநாட்டுச் சிற்பம் என்று; ஆனால் பொதுவாக இரண்டுமே வாஸ்து சாஸ்த்ரத்தை அடிப்படையாகக் கொண்டதேயாகும். ஆனாலும் சில வேற்றுமைகள் காணப்படுகின்றன.

தமிழ்நாட்டில், மானஸாரம், அகஸ்த்யரின் ஸகளாதிகாரம், காச்யபருடைய அம்சுமத்பேதம், ஸ்ரீகுமாரனுடைய சிற்பசாஸ்த்ரம், மயாசுரனுடைய மயமதம் முதலிய பல நூல்கள் காணப்படுகின்றன.

வடநாட்டில் விச்வகர்ம வாஸ்து சாஸ்த்ரம், ஸமராங்கணஸூத்ரம், மண்டனருடைய வாஸ்துசாஸ்த்ரம் முதலிய நூல்கள் புகழ்பெற்றவை.

வாஸ்துசாஸ்த்ரத்தில் வீடு, நகரம், கிராமம் முதலியவைகளின் அமைப்பைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. மேலும் ஈசான சிவகுரு தேவபத்ததி, ஹரி பக்தி விலாஸம், அபிலஷிதார்த்த சிந்தாமணி (மானஸோல்லாஸம்) ரகுநந்தன மடபிரதிஷ்டாபத்ததி, ஹேமாத்ரியினுடைய சதுர்வர்க சிந்தாமணி, கிருஷ்ணானந்தருடைய தந்த்ரஸாரம் முதலிய நூல்களில் பிரதிமாலக்ஷணம், அதற்கு உபயோகமான பொருட்கள் முதலியன விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. மேலும் சித்ரம் தீட்டுவது, பூச்சுபூசுவது, வர்ணம் கொடுப்பது முதலிய விஷயங்களைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன. சிற்பக்கலைக்கு பூகோள, சரித்திர அறிவும், அந்தந்த பிராந்திய கலையின் அறிவும், அனுபவமும் தேவைப்படுகிறது.

காந்தார, நளாந்தா, அமராவதீ, ஸாரநாத, மதுரா முதலான இடங்களில் காணப்படும் பௌத்த–ஜைன பிரதிமைகளின் அறிவும் கலைத்திறனும் அறியவேண்டும். இந்தக் கலை கிருஸ்துவிற்கு முன்பிலிருந்துஇருந்து வந்ததாகத் தெரிய வருகிறது. குப்த காலத்திலும் சிற்ப வாஸ்து சாஸ்த்ரங்கள் இருந்ததாகத் தெரிகின்றன.

கற்களில் சிலைகளை வடிக்கும்போது கற்களைப் பற்றிச் சில விவரங்கள் அறியவேண்டியுள்ளது. அதாவது கற்கள் பலவிதம். அவைகளில் முக்யமானதாகக் கவனிக்கவேண்டியது முற்றியதா, இளமையானதா? என்று. இவைகளை அறிய இலக்கணம் கூறுகிறது விஷ்ணு தர்மோத்தரமென்ற நூல்.

एकवर्णां समां स्निग्धां निमग्नां च तथा क्षितौ ।
घातातिमात्रस्फुरणां दृढां मृद्वीं मनोरमाम् ॥
कोमलां सिकताहीनां प्रियां दृङ्मनसोरपि ।
सरित्सलिलनिर्धूतां पवित्रां तु जलोषिताम् ॥
द्रुमच्छायोपगूढां च तीर्थाश्रयसमन्विताम् ।
आयामपरिणाहाढ्यां ग्राह्यां प्राहुर्मनीषिणः ॥

( 10–3–5)

விலக்கத் தகுந்த கற்களின் இலக்கணம் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

अग्राह्यां ज्वलनालीढां तप्तां भास्कररश्मिभिः ।
अन्यकर्मोपयुक्तां च तथा क्षाराम्बुसंयुताम् ॥
अत्यन्तोपहतां रूक्षामपुण्यजनसेविताम् ।
तिलैः सम्भूषिता या तु विचित्रैर्बिन्दुभिश्चिता ॥
रेखामण्डलसङ्कीर्णां विद्रां विमलसंयुताम् ।

( 3-90–6–7½ )

மேலும் கற்களைத் தேர்ந்தெடுக்கும் போது சில பூச்சு வகைகளைப் பூசி தேர்ந்தெடுக்கவேண்டும். விவேக விலாஸமென்ற நூலில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

निर्मलेनारनालेन पिष्ठया श्रीफलत्वचा ।
विलिप्तोऽश्मनि काष्ठे वा प्रकटं मण्डलं भवेत् ॥

சுத்தமான பழைய தயிர் அல்லது பெறு நெல்லிச் சாறு, பில்வ பழச் சாறு இவைகளைச் சேர்த்து கற்களின் மேல் அல்லது மரத்தின் மேல் பூசப்பட்டு அதன்பின் நன்கு தூசுகளை அகற்றியபிறகு அவைகளைக்கொண்டு பிரதிமைகளையோ, விக்ரஹங்களையோ செய்யவேண்டும். இம்மாதிரி பல உபாயங்கள் கூறப்பட்டுள்ளன. மேலும் மரங்களைப்பற்றியன பிருஹத் ஸம்ஹிதை, பவிஷ்யத் புராணம், மத்ஸ்ய புராணம், விஷ்ணு தர்மோத்தரம் முத

லான நூல்களில் கூறப்பட்டுள்ளன. பிரதிமைகள் செய்யும் விஷயத்தில் மரத்திற்கு அதிக இடம் காணப்படவில்லை. எங்கேயாவது அபூர்வமாக பிரதிமைகள் மரத்தில் செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். மரம் என்று சொன்னால் செம்புளிச்சமரம், சந்தன மரம், வந்நிமரம், இலுப்பைமரம் முதலியவைகளாகும். இந்த மரங்களால் செய்யப்படும் பிரதிமைகள் அந்தணர்களால் பிரதிஷ்டை செய்வது உத்தமம்.

அரசு, கருங்காலி, பில்வம் முதலிய மரங்களால் செய்யப்படும் பிரதிமைகளை க்ஷத்திரியர்கள் பிரதிஷ்டை செய்யலாம்.

கருங்காலி, நொச்சி, தினிச மரம் இவைகளால் செய்யப்படும் பிரதிமைகளை வைச்யர்கள் பிரதிஷ்டை செய்யலாம்.

தும்பை, புன்னை மரம், மராமரம், மருத மரம் முதலிய மரங்களால் செய்யப்படும் பிரதிமைகள் மற்றவர்கள் பிரதிஷ்டை செய்யலாம். மரத்தினால் செய்யப்பட்ட பிரதிமைகள் பிரதிஷ்டை செய்வதென்பது பழமையானது. இப்பொழுது பூரியில் இருக்கும் ஜகந்நாதஸ்வாமி, பலராமன், ஸுபத்ரா முதலிய பிரதிமைகள் மரத்தினலானவைகளே! இம்மாதிரி மரத்தினலான பிரதிமைகளை 12-ஆண்டுகளுக்கு ஒரு முறை புதுப்பித்து பிரதிஷ்டை செய்ய வேண்டும். தமிழ் நாட்டில் தென்னாற்காடு மாவட்டம் திருக்கோயிலூரில் உள்ள திரிவிக்ரமூர்த்தி மரத்தினல் செய்யப்பட்டதே.

மண் பிரதிமைகளும் உலகில் வழக்கில் இருக்கிறது. மர பிரதிமைகளில் தச்சனின் கைவண்ணத்தைப் பார்க்கலாம். மண், கல் இவைகளில் சிற்பிகளின் கைத்திறனைப் பார்க்கலாம். மண் பிரதிமைகள் செய்பவனுடைய பெயர் கும்பகாரன் என்று கூறப்பட்டுள்ளது. கும்பகாரன் என்றால் குயவன் என்ற பொருள் அல்ல. புராணங்களில் விச்வகர்மாவிற்கும்-சூத்திர ஸ்திரீக்கும் உண்டானவர்கள் ஒன்பது கலைச் சிற்பிகளாகக் கூறப்படுகிறார்கள்.

அவர்களாவன: 1. மாலா காரன், 2. கர்மகாரன், 3. சங்ககாரன், 4. குவிந்தகன், 5. கும்பகாரன், 6. காம்ஸ்யகாரன் (கொல்லன்), 7. ஸுத்ர தாரன், 8. சித்ரகாரன், 9. ஸுவர்ண காரன். (தட்டான்). இவர்களில் கும்பகாரன் என்பவன் மண் பிரதிமைகள் செய்பவனுவான்.

பொதுவாக மண் பிரதிமைகளில் இரண்டு பாகங்கள் உள்ளன. ஒன்று ஸ்தூல ரூபமான பிரதிமை நிர்மாணம், மற்றொன்று ஸூக்ஷ்ம ரூப பிரதிமை நிர்மாணம் என்று ஸ்துல ரூப பிரதிமா நிர்மாணத்தில் இரண்டு விதமுண்டு. ஒன்று சுத்தமான மண்ணைக் கொண்டு செய்யும் பிரதிமை. மற்றொன்று களிமண்ணுடன் மணல் முதலியவைகளைக் கலந்து பிரதிமை செய்வதாகும்.

சுத்தமான மண்ணில் செய்வதென்பது பழமையானது. இப்பவும் வடதேசத்தில் விநாயக சதுர்த்தியின் போது கணபதியையும், தீபாவளிப் பண்டிகையின்போது லக்ஷ்மியையும் மண்ணால் செய்து வழிபடுகிறார்கள். நம் தமிழகத்தில் விநாயக சதுர்த்தியின்போது மண்ணால் செய்த விநாயகரை வழிபடுகிறோம். பங்களா தேசத்தில் மகாகாளியை மண்ணால் செய்து வழிபடுகிறார்கள். மண் பிரதிமைகள் செய்யும் முறையைப்பற்றி ஹயசீர்ஷ பாஞ்சராத்ரத்திலும், ஸமராங்கண வாஸ்து சாஸ்த்ர நூலிலும் கூறப்பட்டுள்ளது. ஹரிபக்தி விலாஸம் என்ற நூலில் 18-வது அத்யாயத்தில்,

मृत्तिकावर्णपूर्वेण गृह्णीयुस्सवर्णतः ।
नदीतीरेऽथवा क्षेत्रे पुण्यस्थानेऽथवा पुनः ।।
पाषाणशर्करालोहचूर्णानि समभागतः ।
मृत्तिकायां प्रयोज्याथ कषायेण प्रपीडयेत् ।।
खदिरेणार्जुनेनाथ सर्जक्षीवेण्टकुङ्कुमैः ।
कौटजैरायसैः स्नेहैः दधिक्षीरघृतादिभिः ।।
आलेख्य मृत्तिकां तैस्तैः स्थाने स्थाप्य पुनः पुनः ।
मासं पर्युषितं कृत्वा प्रतिमां परिकल्पयेत् ।।

என்று கூறப்படுகிறது.

நதியின் கரையிலிருந்தும், பயிர் செய்யும் நிலத்திலிருந்தும், பாம்பு புற்று போன்ற பரிசுத்தமான இடத்திலிருந்தும் மண்ணை எடுத்து ஸம பாகத்தோடு கற்தூள் உடன் அல்லது மணலுடன் அல்லது உலோகப் பொடிகளுடன் கலந்து பிறகு கருங்காலி மரம், மருத மரம், மராமரம், வஞ்சி மரம், குங்குமமரம், வெட்பாலை மரம் முதலிய மரங்களுடைய சாருடன் தயிர், பால், நெய் இம்மாதிரி

(38-ம் பக்கம் பார்க்க)

# கட்டண உயர்வு

திருமலையில் தலை முடி செலுத்துவதற்காக வசூலிக்கப்படும் டிக்கெட்டுகளின் கட்டணங்கள் கீழ்வருமாறு 16-7-81 முதற் கொண்டு உயர்த்தப்பட்டுள்ளது.

1. திருமலையிலுள்ள பிரதான கல்யாண கட்டா, டி. பி. எம். மற்றும் சி. ஆர். ஓ. கல்யாண கட்டாக்களில்: ரூ. 1–50 (டிக்கெட் ஒன்றுக்கு)

2. திருமலையிலுள்ள சத்திரங்களில், காட்டேஜுகளில், மைசூர் சத்திரத்தில்: ரூ. 2–00 (டிக்கெட் ஒன்றுக்கு)

# குறுக்கெழுத்துப் புதிர்

திரு. எஸ். ஜி. சேஷகிரி–கோவை.




| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 2 | | 3 | | | X | 4 |
| | X | 5 | | | X | 6 | | |
| 7 | 8 | | X | 9 | 10 | | | X |
| | | X | 11 | X | | X | 12 | 13 |
| X | 14 | 15 | | 16 | | | X | |
| 17 | X | | | | X | X | X | |
| | 18 | | | X | 19 | | X | |
| | | | X | 20 | | 21 | | |
| | | X | 22 | | | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. திருமால் எழுந்தருளியுள்ள முக்கிய தலங்கள் மூன்றில் ஒன்று———.
5. அன்பர் என்பவர்க்கே———தரும்........ பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.
6. ———என்பது சிவனை முழு முதற்கடவுளாக கொண்ட சமயம்.
7. மார்கழி———மிக விசேடமானது என்று பகவத் கீதை கூறுகிறது.
9. —;—பாசம் என்ற இந்த மூன்றும் என்றும் உள்ளவை என்றும், மேலும் விவரித்து கூறுவது இந்து சமயம் ஒன்றேயாம்.
12. ஸ்ரீமந் நாராயணனுடைய———க் கமலத்தில் தோன்றியர் பிரம்மா.
14. வைணவ அடியார்கள்———எனப்படுவர். (கலைந்துள்ளனர்.)
19. ———என்பது யார்? யாது? என்று ஆராய்ந்தால் அது மறைந்துபோகும் என்று இந்து சமயம் மெய்ப்பிக்கிறது. (பரமஹம்சர், ரமண ரிஷி போன்றோர் எடுத்துரைக்கிறார்கள்.)
21. ———சன்மார்க்க சமயம் என்று அமைக்க ஜோதி ராமலிங்கர் பாடுபட்டார்.
22. சிவபெருமானை மாணிக்க வாசகர் புகழ்ந்து துதித்து பாடிய சைவமறை நூல்———.

### மேலிருந்து கீழ்

1. முத்தொழில்களில் ஒன்றான காத்தல் தொழில் புரிபவர்———.
2. இந்து சமயத்தில் முதல் நூல்கள்———, ஆகமம் என இரண்டுமாம்.
3. ———நாடன் ராமகாதையைத் தமிழில் பாடினார்.
4. ———என்று இந்து சமய வேதம் தொடங்குகிறது. அதுவே எல்லா ஒலிகளுக்கும் மூல காரணம். (பிரணவம் என்பர்.)
8. இன்னிசையால் நாளும்———பரப்பினார் திருஞான சம்பந்தர்.
10. ———எனும் பாலமுனிவர் திருமால் பெருமையை விவரிக்கும் பாகவதம் மொழிந்தார்.
11. சைவ சமயத்தார் ஓத வேண்டிய தமிழ்மறை நூல்கள்———, திருவாசகம் என்று இரண்டுமாம். (மற்றவர்களும் ஓதலாம்.)
13. விஷ்ணுவை ஆழ்வார்கள் புகழ்ந்து துதித்து பாடிய பாசுரங்கள்———ஆகும்.
15. திருப்பாவை பாசுரங்களைப் பாடியவர்———ஆவர்.
16. ஆய———கள் அறுபத்தினான்கு என்பர்.
17. படைத்தல் தொழில் புரிபவர்———.
19. பூசுதல் சிவ சமய சின்னம்.
21. மன்னும் இமயமலை எங்கள் மலை.

(விடைகளுக்கு 24ம் பக்கம் பார்க்க)

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

அருச்சையில் மிகவும் ஈடுபட்டவர் யார்? ஏற்றம் எதனால்?

ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இவர்களால் மிகவும் போற்றப்பட்டதால் அருச்சைக்கு ஏற்றம் அதிகம். இதுகொண்டே ஸ்ரீவைணவர்களைப் பதியே பரவித் தொழும் தொண்டர்கள் என்பார்கள். மகரிஷிகளில் சௌநகருக்கு உருவ வழிபாட்டில் அதிகம் ஈடுபாடு.

நாச்சியார் திருவுருவங்கள் எவ்வளவு?

1. தனிக்கோயில் கொண்டிருக்கும் நிலை. (அதிகாராருச்சை). இவள் மோக்ஷம் தரும் அதிகாரம் படைத்தவர். பெரும்பாலும் தனிக்கோவில் நாச்சியார் தாமரையில் அமர்ந்தே தரிசனம் தருவர்.
2. திருமால் திருமார்பில் எழுந்தருளியிருக்கும் நிலை (லயாருச்சை). பெருமாளின் மார்பின் மறு பக்கம் ஸ்ரீவத்ஸம் என்ற மச்சம் உள்ளது. இவ்விரண்டிற்கும் நடுவில் நடுமார்பில் கௌஸ்துபம் என்ற ரத்னம் அமைந்திருக்கும். இந்த ரத்னம் நாச்சியாருக்குக் கண்ணாடி போல் உள்ளது என வருணிப்பர்.
3. உபய நாச்சிமார்களாக எழுந்தருளி இருக்கும் நிலை(போகாருச்சை).(என மூன்றுவகைப்படும்.) இவ்விரு நாச்சியார்களும் பெரும்பாலும் பெருமாளுக்கு இருபக்கமும் நின்றிருப்பார்கள்.

அவதாரம் எவ்வளவு வகைப்படும்?

1. பூர்ணாவதாரம்-(இராாமன், கண்ணன் முதலான எம்பெருமான்கள் ("இதனை முக்கியம்" என்றும் கூறுவர்)
2. ஆவேசம்—(இதனைக் கௌணம் என்று கூறுவர்.
   (அ) ஸ்வரூபாவேசம் — "பரசுராமர்" முதலியோர்.
   (ஆ) சக்த்யாவேசம் — சில சமயம் சில கார்யங்களைச் செய்ய மனிதர்களிடம் சிலகாலம் திருமாலின் சக்தி ஏற்படுவது. ஆக ஆவேசம் இரண்டு.
3. அம்சாவதாரம் மனிதர்கள் நல்வழிப்படுத்த ஆழ்வார்கள், ஆசாரியர்கள், திருமாலின் பூஷண ஆயுதங்களின் அமிசமாகத் தோன்றுவதுண்டு.

திருமாலை எந்நிலையில் நின்று வழிபடவேண்டியது?

தலைவி தலைவனிடம் போலவும், தாய் சேயிடம் போலவும், சீடன் ஆசாரியனிடம் போலவும், உற்ற நண்பன் தூய நண்பனிடம் போலவும் என நான்கு வகையில் கூறுவார்கள்.

முக்தி அடைய வழி என்ன?

ஆசாரியன் திருவருள் (இதுவே முதற்படி) பின் அதனடியாகப் பிறக்கும் அகந்தை, மமதை களைந்த ஜீவாத்ம பரமாத்ம விவேகம், சரணாகதி முதலியன. 9 படிகள் கொண்டதாயும் இதனைப் பகர்வர். முக்திக்கு பெருமாளிடம் மஹாவிச்வாஸமும் தன்னிடம் எதுவும் கிடையாது என்ற கார்ப்பண்யமும் முக்கியமானவை.

மூலமந்திரம் என்றால் என்ன?

ஆசாரியனிடமிருந்து முறைப்படி உபதேசம் பெற்று, நிச்சலும் முறைப்படி, ஒரு வைணவரால் ஓத வேண்டிய தலைசிறந்த மந்திரமான "நாராயண மந்திர" மாகும். இதில் எட்டெழுத்து (பதம்) உள்ளதால், இதனைத் திருவஷ்டாக்ஷரம் எனவும் அழைப்பார்கள். அறிய வேண்டியதனைத்தும் இம் மந்திரத்தில் உள்ளது. இது தந்தைக்கு ஒத்த மந்திரம் என்பர். இதற்கு மூலமந்திரம் மகாமந்திரம் எனவும் பெயர்.

இதனை வெளியிட்டவர் யார்?

ஸ்ரீமந் நாராயணனே—பதரிகாசிரமம் (இமயம்) என்ற இடத்தில், நரன் என்ற தானாகிய சீடனுக்கு உபதேசம் செய்யும் வாயிலாக வெளியிட்டருளினார். பிறகு கீதோபதேச காலத்தில் இவர்களே கிருஷ்ணனாகவும், அருச்சுனனாகவும் ஆனார்கள் என்பார்கள்.

இதன் சுருக்கமான பொருள் என்ன?

நம்மை அன்றி அவனில்லை, அவனின்றி நாமில்லை என்பதும், செய்பவனும், செய்விப்பவனும் அவனே என்பதும் சுருக்கமான பொருளாகும். ஒரு ஜீவன் அவனுக்கே ஆட்பட்டு, அவனுக்கே சேஷனாக இருந்து அவன், அவனடியார்களின் பணியே தஞ்சம் என்றிருப்பதே மனிதன் உய்வதற்கான உரிய வழி.

வைகுண்டம் என்ற சொல்லின் பொருளென்ன?

மாயையின் பசையற்ற, மெய்யறிவு நிறைந்த, நலமந்தமில்லதோர் பெருநலம் என்பது. இதனைப் பரமதபம், வைகுந்தம், நலமந்தமில்லதோர் நாடு, திருநாடு, அபராஜிதா, அயோத்யா, பெருநாடு, விண்ணுலகம் அப்ராக்ருதலோகம் என்றெல்லாம் அழைப்பார்கள். திருவரங்கம் பெரிய கோயிலின் அமைப்பு ஸ்ரீவைகுண்டத்தின் அமைப்பாகஇருக்கும்.

திருமாமணி மண்டபம் என்பது யாது?

ஸ்ரீமந் நாராயணன் அதாவது பரமபதநாதன் திருமகள், மண்மகள், நீளை என்ற தமது பிராட்டிகளுடனும், நித்திய சூரிகளுடனும் எழுந்தருளியிருக்கும் மண்டபம் என்பார்கள். இங்குதான் பெருமாள் மூன்று தேவிகளுடன், தர்மாதி பீடத்தில் ஆதார சக்திகள் சாமரம் வீச ஸ்ரீ ஆதிசேஷன் மேல் எழுந்தருளியுள்ளார்.




# ஸ்ரீ வரலக்ஷ்மி விரத பூஜை

திருமணமான பெண்கள் அனைவரும் இவ்விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். இல்லையெனில் விரத பலனை கிடைக்காது போய் விடும் என பல ஸ்மிருதிகள் கூறியுள்ளன. இவ்விரதத்தை ஆடி மாதம் பௌர்ணமிக்குமுன் வரக்கூடிய வெள்ளிக்கிழமையன்று சுமங்கலிகள் விரதம் அனுஷ்டித்து வரலஷ்மிக்கு பூஜை செய்ய வேண்டும். அன்றைய தினம் வீட்டை சுத்தமாக்கிச் சாணம் கொண்டு மெழுகி கோலம் இட்டு வழக்கமாக பூஜை செய்யும் இடத்தில் மண்டபம் அவரவர் வசதிற்கேற்ப அமைத்து சுமார் ஒரு அடி சதுரத்திற்கு நெல் பரப்பி பின்னர் அதன்மீது ஒரு தாம்பாளத்தில் அரிசியை பரப்பி வைக்க வேண்டும். செப்புக்குடத்தை அரிசியால் நிரப்பி அதனுள் 5 வகையான பழங்களை வைத்து மாவிலையை தேங்காயைச் சுற்றி கோத்து மலர்களால் அலங்கரித்து கலசத்திற்கு மேல் தேவியின் பிரதிமையை வைத்து, பூஜை செய்து வைத்த நோன்பு கயிற்றை வலது கையில் அணியலாம். நைவேத்தியம் அவரவர் சக்தி கேற்ற வகையில் வைத்து பக்தி சிரத்தையுடன் செய்தாலே போதுமானது. இவ்விரத்தின் மகிமையைப் பற்றி தெரிந்து கொள்ளல் மிக அவசியம்.

பர்வத சிகரத்தில் பார்வதி தேவியுடன் ஈஸ்வரன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கும் சமயம் இருவரும் ஒருவரை ஒருவர் ஜெயித்து விட்டதாக கூறிக் கொள்ள வாக்குவாதம் முற்றத் தொடங்கியது. சித்திர நேமி என்ற கண தேவதையை அழைத்து மத்யஸ்தம் கேட்க பரமசிவன்தான் வெற்றி அடைந்தார் என பக்ஷபாதத்தால் கூறியதைக் கேட்டு வெகுண்டு பார்வதி தேவியானவள் சித்திர நேமியை குஷ்ட ரோகியாகி தவிக்கும்படி சாபமிட்டாள். உடனே ஈஸ்வரன், 'தேவி! நீ அவசரப்பட்டு முற்றிலும் உண்மையைக் கூறிய சித்திரநேமியை சபித்து விட்டாய். அவன் சாபம் தீரும் வழியையும் நீ சொல்வாயாக' என வேண்ட, பார்வதி தேவியும் கோபம் தணிந்து, 'தடாக தீரத்தில் எப்போது தேவ கன்னிகைகள் பலர் சேர்ந்து புண்ணியமான மகா விரதம் ஒன்றை அனுஷ்டிக்கிறார்களோ அப்போது தான் சாபம் நீங்கும்' என்றுகூறினாள்.

நாட்கள் சென்றபின் ஒரு தடாகக் கரையில் வாசம் புரிந்து வரலானான். ஒரு நாள் பதிவிரதை பெண்கள் தேவியை வழிப்படுவதைக் கண்டு அவர்களை அணுகி பூஜையைப் பற்றி வினவினான்.

அப்பெண்கள் அன்று தாங்கள் வரலக்ஷ்மி விரதம் அனுஷ்டிக்கப் போவதாகக் கூறினார்கள். ''வரலக்ஷ்மி விரதம் புனிதமானது எல்லா சௌபாக்கியங்களையும் அளித்து மாங்கல்ய பலத்தை அதிகரிக்கக் கூடியது. சிராவண மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் வெள்ளிக்கிழமையன்று வீட்டின் கிழக்கு திக்கில் கலசத்தை கிரமப்படி வைத்து முறைப்படி பூஜை செய்ய வேண்டும்.'' இவ்வாறு கூறிக் கொண்டே அவர்கள் பூஜையை ஆரம்பிக்க, அச்சமயத்தில் அங்கிருந்து எழுந்த ஹோம புகையையும் நெய் தீபத்தையும் கண்டதாலும் அவனுடைய குஷ்ட நோய் நீங்கி குணமடைந்தான். ''விரதம் அனுஷ்டிப்பவர்கள் ஒரு பாக்கு ஒரு வெற்றிலை மட்டும் சுண்ணும்பு சேர்க்காமல் கடித்து மெல்ல வேண்டும். வாய் சிவக்காமல் இருப்பின் இவ்விரதம் மேற்கொள்ள கூடாது.'' இவ்விதம் எல்லாவற்றையும் கேட்டு, கண்டு அறிந்தபின் பூரண குணம் அடைந்து கைலாசம் சேர்ந்து பார்வதி பரமேஸ்வரை வணங்கி 'வரலக்ஷ்மி தேவியின் அருளால் என் நோய் நீங்கி தங்களை மீண்டும் காணும் பாக்கியம் கிடைத்தது' எனக்கூறி அவர்களை நமஸ்கரித்தான்.

பார்வதியும் சந்தோஷமடைந்து, பரமசிவன் மனங்கனிந்து ''நீ இனி இங்கேயே சகல போகங்களுடன் இருப்பாய். இந்த விதமாக, மகா விரத மகிமையால் வைகுந்தம் சேரக் கடவாய்'' என்றார்.

எனவே வரலக்ஷ்மி தேவியை மகிழ்விக்கும் இவ்விரதத்தை அனுஷ்டித்தவர்கள் இவ்வுலகில் சகல சௌபாக்கியங்களையும் அடைந்து பின்னர் நற்கதி அடைவர்.

இம் மகா விரதத்தைப் பற்றி தெரியாதவர்களும் இதை அறிந்து அனுஷ்டித்தால் ஸந்தானம் விருத்தியாகி சுமங்கலியாக வாழ்ந்து நற்கதி அடைவார்கள் என்பது நிச்சயம்.



செல்வி. எம். கலா பி.ஏ.
வேலூர்.

# விவேகானந்தரின் கடவுள் தத்துவம்

புலவர். வி. விஜயலக்ஷ்மி - தேதியூர்.

## முன்னுரை

பாரத நாட்டில் அவதரித்து குருவருளும், திருவருளும் கூடப் பெற்றமையால் உலகை உய்விக்கும் ஒளிப் பிழம்பெனத் திகழ்ந்தார் சுவாமி விவேகானந்தர். "மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்படும்'' சீயமென, சீரிய சிந்தை உடையவராய் மேலை நாடுகளுக்கும், கீழை நாடுகளுக்கும் சென்று சமயப்பணிகளை செம்மையுற நிறை வேற்றினர். இவருடைய சமயப் பெருக்கில் சில துளிகளைக் கீழே காண்போம்!

## பூரணத்துவம்

உலகில் உள்ள ஜீவாத்மா ஒவ்வொன்றும் தெய்வத் தன்மை கொண்டதாகும். இந்த ஜீவாத்மாக்கள் யாவும் சுதந்திர வேட்கை கொண்டனவாக விளங்குகின்றன. மிகவும் வியக்கும் ஆற்றலைக்கொண்டு விளங்கும் இயந்திரங்களைக் காட்டிலும், அழகான சிறகுகளை உடைய பறவையும், வண்ணத்துப் பூச்சியும் போற்றப் படுவதற்குக் காரணம் என்ன? உயிர் கொண்டு அவை பூமியில் உலாவுவதாலன்றோ! இப்படிப் பட்ட உயிரினங்கள் யாவும் தனக்கென்ற ஒரு தனித் தன்மையை, சுதந்திரத்தைப் பெற வேண்டும் என்று விரும்புகின்றன. அப்போது அக மனத்திற்கும், புறமனத்திற்கும் இடையில் போராட்டம் நிகழ்கிறது. சுதந்திரம் என்பது போராடிப் பெற வேண்டிய ஒன்றல்லவா! இப்போராட்டம் அக மனத்தில் உள்ள உண்மை ஒளிக்கும், புறமனத்தில் உள்ள மாயைக்கும் இடையில் நிகழும் போது 'விடுதலை' என்னும் முடிவை அடைவது அதன் இலக்காகிறது; அறிந்தோ, அறியாமலோ செய்யும் சுதந்திரத்தைப் பெறும் முயற்சிதான் எல்லா இறை வழிபாடுகளுக்கும் அடிப்படையாக விளங்குகிறது. மென்மேலும் சுதந்திரத்தை அடைவது தான் முயற்சிகளின் மௌனவி யாகும். ஏனெனில் முழுச் சுதந்திரத்திலே தான் பூரணத்துவம் அமைந்திருக்கிறது.

## கடவுள் வழிபாடு

இவ்வையகத்தின் வெவ்வேறு வகையான கடவுள் வழிபாடுகளை உற்று நோக்கினுல் சுதந்திரம்பெறும் வேட்கையே குறிக்கோள் என்பது நன்கு புலப்படுகிறது. தம்மைக் காட்டிலும் சிறப்புற்றவைகளென்றும், ஆற்றல் படைத்தவைகளென்றும், சுதந்திரத்திற்கு வரம்பு எழுப்பி விடக் கூடியவைகளென்றும் உணர்ந்து அவற்றின் தயவை மக்கள் நாடினுர்கள். ஓர் அற்புதத்தை உலகம் எதிர்பார்க்கிறது என்பது இதனுல் விளங்குகிறது. ஒன்றிலும் மன நிறைவு காண முடியாத மனிதனின் வாழ்க்கை போராட்டம் மிகுந்ததாகக் காணப்படுகிறது.

## மனிதனும் கடவுளும்

கடவுள் பற்றிய கருத்துக்கள் மனித அமைப்பில் அடிப்படையாக உள்ளது. சச்சிதானந்த வடிவமாக உண்மை, அறிவு, இன்பம் இவற்றின் வடிவாகக் கடவுள் இருக்கிறுர் என்னும் உயர்ந்த கருத்து நாமறிந்த ஒன்று. அவர் நம்முள்ளேயும் கூட அறிவின் சாரமாகவும், ஆனந்த வடிவமாகவும் விளங்குகிறுர். இயற்கையின் நியதிகளை எதிர்த்து நிற்கும் நாம் உள்ளே ஒலிக்கும் குரலை உணர முடியாதவர்களாகிறோம். இழிவான மனத்திற்கும், உயர்ந்த மனத்திற்கும் இடையே எழும் போராட்டம் நமக்குப் புலனுகாமலே நடக்கிறது. "கட்டுப்பாடுகள் வேண்டாம்'' எனக் கூச்சலிடும் நாம்கூட பிரபஞ்சத்திற்குக் கட்டுப்பட்ட இயந்திரங்களாகிறோம். மேல் நிலையில் இருக்கும் உயிர் செய்யும் போராட்டத்தின் முடிவு ஆத்ம க்ஷேமாகும்.

## இயற்கையும் கடவுளும்

போராட்டம், விடுதலை, நன்மை, தீமை இவை இருந்தே ஆக வேண்டிய ஒன்றுகும். உடலின்பம் மறைந்து உண்மையை மனித உள்ளம் விரும்பத் தொடங்குகிறது. இங்கே அஞ்ஞானத் திரை வழியே தெய்வ ஒளி மெல்ல ஒளிவிடக் காண்கிறோம்! இயற்கை முழுவதுமே கடவுளின் வழிபாடுதான். அறிவு முதிர, முதிர நாம் இயற்கையைஆள்பவராகிறோம். தன்னைப் பற்றியும், இயற்கையைப் பற்றியும் அறிந்த மனிதனே முழுச் சுதந்திரம் பெற்றவனுகத் திகழ்கிறுன். தம்முடைய உண்மையான இயல்பிலிருந்து கடவுள் எந்நாளும் மாறுவதில்லை. ஆனுல் நாம் நம்முடைய இயல்பை விட்டு விட்டு கடவுளின் பால் இரண்டற கலக்க முயல்கிறோம். இயற்கையின்மீது நின்று கொண்டே, அந்த இயற்கையின் விளைவுகளுக்கு நாம் அடிமைப்படுகிறோம். இயற்கை எந்நாளும் தன் ஒளி குன்றுவதில்லை. ஏனெனில் கடவுளால் வழங்கப்பட்ட அருளொளி அஃதாகும்.

## ஆணை செலுத்துக

இங்கு நாம் வழிபடும் கடவுள் என்பவர் தாமே விளங்கும் பொருளாவார். உருவ மற்றவர். எல்லாம் அறிந்தவர். இயற்கையை உணர்ந்தவர். அதற்குத் தலைவர். எல்லா வழிபாடுகளுக்கும் பின்னணியில் ஓர் இலக்காக அவர் நிற்கிறுர். நன்மை எவ்வாறு அவரை வழிபடுகிறதோ, அதைப் போலத் தீமையும் அவரை

வழிபடுகிறது. நாம் ஒரு தீச்செயலைப் புரியும்பொழுது அதன் தூண்டுதலும், சுதந்திர உணர்ச்சியிலிருந்து தானே பிறந்தது. அந்த உணர்ச்சி அங்கே தவறான பாதையில் செலுத்தப் பட்டது.

## அஞ்சற்க

*நாம் அச்சம் தருபவற்றைக் கண்டு அஞ்சலாகாது. உள்ளம் தளராமல் அவற்றை எதிர்த்து நின்று போராட வேண்டும். நமக்குச் சுதந்திரம் வேண்டுமென்றால் நாம் இயற்கையை வென்று அதைப் பெற வேண்டுமே ஒழிய, அஞ்சி ஓடுவதால் அதைப் எய்தல் இயலாது. அச்சம், இன்னல், அஞ்ஞானம் இவை அகல வேண்டு மானால் இவற்றின்மீது நாம் ஆணை செலுத்த வேண்டும்!*

*மரணம் என்பது யாது? எவை பயங்கரமானவை? அவற்றிலும் கூட கடவுளின் வடிவத்தை நாம் காண லாம். நாம் தீமையையும், பேரச் சத்தையும், இடும்பையையும் கண்டு ஓடி ஒளிந்தால் நம்மை இவை பின் தொடரும். எதிர்த்துப் போராடி னால் இவை பறந்து போகும். வசதி யையும், சுகத்தையும் விரும்பித் துதிக்கும் இவ்வுலகம் இடும்பையை வரவேற்பதில்லை. இன்ப துன்பங் களைக் கடந்து செல்வதே சுதந்திர மாகும். நல்லது, தீயது ஆகிய இவற்றை எல்லோரும் எதிர்த்தே தீரவேண்டும். கடவுளை நாம் வழிபட முயல்கிறோம். ஆனால் உடல் இதற் குத் தடையாக நிற்கிறது. இயற்கை நமக்கும் கடவுளுக்கும் இடையில் தோன்றி நம் பார்வையை மறைக் கிறது. பேரிடியிலும், அவமானத்தி லும், துயரிலும், பாவத்திலும் ஆண் டவரை உணர்ந்து அன்புடன் வழி படக் கற்றுக் கொள்ளவேண்டும். கடவுள் அறமே வடிவானவர். சுதந் திரத்தை நாம் எண்ணும் போதே கடவுளையும் உடன் எண்ணவேண்டும். எல்லாவற்றிலும் கடவுளைக் காணும் போதுதான் ஒற்றுமைத் தத்துவம் நம்முள் விரிவடையும். பல்லாயிரக் கணக்கான பனித்துளிகளிலும் ஞாயிறு தோற்றமளிப்பது போல, ஆண்டவர் நிழலான நாமனைவரும் எண்ணிறந்தவர்களாய்த் திகழ்கி றோம். தெய்வத் தன்மை மிளிரும் நல் இயல்பான வடிவத்தை உணர்ந்து விட்டால், நிழல்கள் யாவும் மறைந்து விடும். ஒவ்வொன்றிலும் 'ஒருமை' யை அறிகிற உணர்வை நாம் பெறு வோம். கடவுளைப் பற்றுவதற்கு குறுகிய நோக்கமுடையவர்களாக நாமில்லாமல், ஒவ்வொன்றிலும் கடவுளைக் கண்டு தொழுவோம். அதற்கு முதலில் நாம் என்ன செய்ய வேண்டும்?*

## கடவுளைக் காண

*முதல் முதலில் கடவுளைப் பற்றிய குறுகிய கருத்துக்களை அகற்றவேண் டும். ஒவ்வொருவரிடத்தும் ஆண்ட வரைப்பார்க்கவேண்டும். அவரே எல்லாக் கைகள், வாயிலாகவும் தொழில் புரிகின்றார். எல்லாக்கால் கள் மூலமாகவும் நடக்கிறார். ஒவ் வோர் உயிரிலும் உறைகிறார். இந்த ஒருமை உணர்ச்சி உள்ளத்தில்பாயும் பொழுது நாம் அமரர்களாகத் திகழ் கிறோம்!*

*விடுதலைப் பாதையானது கூர்மை யான கத்தி போன்றது, எளிதில் கடக்க முடியாது. நம் பலவீனங் களோ, தோல்விகளோ நம்மைக்கட் டுப் படுத்த முடியாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும்! அமுதத்தை நாடும் விடா முயற்சி கொண்ட ஒரு வனுக்கு நஞ்சுள்ள கிண்ணம் கிடைப் பதில்லையன்றோ!*

*உலகத்திலுள்ள எல்லாச் சமயங் களுக்கும் குறிக்கோள் ஒன்றே. ஆனால் உபதேசிக்கும் சான்றோர் களின் மொழிகள்தான் வேறு. பொய் புதைந்த இந்த ''நான்'' என்பது மாய வேண்டும். பரம்பொருள் ஒன்றே ஆட்சி செய்யவேண்டும். கடவுளைத் தவிர நாம் அனைத்தையும் துறத்தல் வேண்டும். அவர் ஒருவரே செங்கோல் செலுத்தவேண்டும். உல கில் தனித்து நிற்கும் தன்மையில்லா நாம் இறைவன்பால் பூரணமாக இருக்கவேண்டும்.*

*வாழ்க்கை என்பது எல்லையற்ற நூலாகும். அதன் மூலம் அத்யாயம் ''எல்லாம் உன் செயலே'' என்பதா கும். இதனை உரைக்கும் பொழுதே மனம் எதிர்த்துப் போராடுகிறது. தாழ்ந்த செயலில் விருப்போடு வெற்றி கொள்பவரே அவ்வாறு எதிர்க்கின்றனர். எல்லாவகைத் துரோகத்திலும், நம்பிக்கைத் துரோ கம் செய்யமுடியாத ஒரு குற்ற மாகும். அத்தக்குற்றத்தை எதிர்த்து நிற்பவர்கள் அனைவரும் செய்கின்ற னர்; நம்முடைய உயர்ந்த ஆன்மா வின் குரலுக்குச் செவி சாய்க்க மறுத் தால், நம்மையே நாம் வஞ்சிக்கி றோம். 'எது வந்தாலும் கடவுள் சித் தம்' எனக்கொண்டு எல்லாவற்றை யும் அவன்பால் ஒப்படைத்தலே சிறந்ததொரு அறமாகும்.*

## முடிவுரை

*மேற்கண்டவாறு கடவுளைப்பற்றிய தெளிவான கொள்கைகளுடன் 'எல் லாம் உனது சங்கற்பமே' என மொழிந்து, விண்ணிலும் மண்ணிலும் நிறைந்த கடவுளின் ஒளியை உல குக்கு நன்குணர்த்திய விவேகானந் தரின் 'ஞான ஒளி' இவ்வுலகில் என் றும் நின்று நிலவுவதாக!*



---

**குறுக்கெழுத்துப் புதிர் விடைகள்**

இடமிருந்து வலம்

1. திருவேங்கடம்
5. தனம்
6. சைவம்
7. மாதம்
9. பசு, பதி
12. நாபி
14. ழ் ஆவாகர்ள் (ஆழ்வார்கள்)
19. நான்
21. சுத்த
22. திருவாசகம்.

மேலிருந்து கீழ்.

1. திருமால்
2. வேதம்
3. கம்ப
4. ஓம்
8. தமிழ்
10. சுகர்
11. தேவாரம்
13. பிரபந்தம்
15. ஆண்டாள்
16. கலை
17. பிரம்மா
19. விபூதி
21. மேரு.

# அகாரம் என்ருல் ஸ்ரீ கிருஷ்ணன்



அகாரம் என்ருல் பகவான் ஸ்ரீகிருஷ்ணன் என்றும் ஆகாரம் என்ருல் உபதேஷ்டாவான ஆசார்யன் என்றும் போதிக்கப்படுகிறது இந்தக் கட்டுரையிஞல். எப்படி இது நிரூபிக்கப்படுகிறது என்று சற்று பார்ப்போம். சப்த சாஸ்திரமாக விளங்கும் நம் வ்யாக்ரண சாஸ்திரம்தான் நமது ஸம்ஸ்க்ருத பாஷைக்கு மூல சாஸ்த்ரம் எனப்பெரியோர்கள் வழங்குவர்.

அந்த வ்யாகரண சாஸ்திரத்தில் எவ்வளவு எழுத்துக்கள் சொல்கப்பட்டிருக்கிறதோ அவ்வளவு எழுத்துக்களும் தனக்கு அங்கி பூதமாக அதாவது ஆதாரபூதமாக உள்ள வேதங்களிலிருந்தே உண்டாயின என்றும், எல்லா விதமான சாஸ்திரங்களும் தங்கள் கொள்கைக்கு ஆதாரமாக, வேதத்தையே உபஜீவித்திருக்கின்றன என்பதும் எல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம். எனவே உலகத்தில் எல்லாவற்றிற்கும் ப்ரக்ருதி ஒன்று உண்டு என்றும் அதுவே வேதமென்றும் விக்ருதி என்றும் அதுவே சாஸ்திரங்கள் என்றும் நிஸ்ச்சயமாகிறது. இதற்கான வேத ப்ரமாணங்கள் உபநிடதங்களில் தலை சிறந்ததான சாந்தோக்ய உபநிடதத்தில் ப்ரமாண வாக்யங்கள் பரக்கக் காணப்படுகின்றன. இப்படியாக ப்ரக்ருதியான வேதங்களில் சொல்லப்படும் அக்ஷர ராசிகள் அனைத்தும் அதனிலும் (அந்த வேதங்களிலேயும்) ஸாரமான காயத்ரீ என்று சொல்லக்கூடிய 24 அக்ஷரங்களிலிருந்தே உண்டாகின்றன. எனவே தற்போது வேதாக்ஷரங்கள் விக்ருதிகள் என்றும், அதிலும் ஸாரமான காயத்ரியில் உள்ள 24 அக்ஷரங்களே ப்ரக்ருதிகள் என்றும் தெரிய வருகின்றது. அதஞலேயே வேதங்கள் சிறந்தது அதனிலும் சிறந்தது காயத்ரீ மந்த்ரம் என்றும் சொல்லப்படுகின்றது. இதையே "न गायत्र्याः परो मन्त्रः न मातुः परं दैवतम्" என்றும் உபந்யாஸர்கள் எடுத்துக் கூறுவர்.

இப்படியாக காயத்ரீ எனும் 24 அக்ஷரங்களும் தனக்கு ப்ரக்ருதியான வ்யாஹ்ருதி த்ரயங்களிலிருந்து உண்டாயிற்று. வ்யாஹ்ருதித்ரயங்கள் என்ருல் பூ:=பூவ:=ஸுவ: என்று சொல்லக் கூடிய பூலோகம், அந்தரிக்ஷ லோகம், ஸ்வர்கலோகம் என்று சொல்லும் மூன்று லோகங்களிலிருந்து என்பதே இதன் அர்த்தம். இதையும் நமது வேதங்களே பறைச்சாற்றுகின்றன. இப்படியாக உள்ள இந்த மூன்று வ்யாஹ்ருதிகளும் தனக்கு ப்ரக்ருதியான ப்ரணவம் என்கிற ஓம்காரத்திலிருந்தே உண்டாயின. ஏனெனில் இந்த ப்ரணவ வடிவமே உலகம் மொத்தம் வ்யாபித்து இருந்து கொண்டு இந்த ஓங்கார வடிவமான ப்ரணவத்திலிருந்துதான் சகலவிதமான தேவர்கள் மானிடர்கள் யக்ஷர்கள் கந்தர்வர்கள் கின்னரர்கள் முதலியோர்கள் இன்னும் பசு பக்ஷிகள் எல்லாம் "பேச்சு சக்தியும்" அதன் மூலம் "அதன் அர்த்தங்களின் உணரும் சக்தியையும்" பெற்று சுகமாக ஜீவிக்கின்றனர். எனவே எல்லோரும் ப்ரணவ உபாஸனை செய்து நல்ல நாவண்மையைப் பெறுங்கள் என்று உபநிடதங்கள் யாவும் ஒரு முகமாக ஓதுகின்றன. இப்படிப்பட்ட இந்த ப்ரணவத்திலே அகாரம், உகாரம், மகாரம் என மூன்று அக்ஷரங்கள் உள்ளன. இந்த மூன்று அக்ஷரங்களில் அகாரம் எனும் ஆதி அக்ஷரம்தான் மிக ப்ரதான எழுத்தாகும். இந்த ப்ரதான அகார எழுத்தினின்றும்தான் சகல எழுத்துக்களும் தோன்றின. இந்த அகாரமே மூல எழுத்தாகும். வேதங்களிலே முதலாவதும் உலக மஹா காவியங்களிலேயே முதல் காவ்யமான நமது ரிக் வேத உபநிடத்திலே அகாரோவை ஸர்வாவாக் ("अकारो वै सर्वावाक्")என்று கூறுகிறது. மேலும் வேதத்தை அநுஸரித்து வேதத்தில் சொல்லப்பட்டக் கருத்துக்களை இன்னும் அழுத்தமாக கூற வந்ததுகளே ஸ்ம்ருதிகளும் எனப்படி பகவானே க்ருஷ்ணவதாரம் எடுத்து அதில் "अक्षराणाम् अकारोऽस्मि" (அக்ஷராணும் அகாரோஸ்மி") என்று அக்ஷரங்களுக்குள் தான் அகாரமாக இருக்கிறேன் எனக் கூறிஞர். எனவே அக்ஷரங்களுக்குள் முதல் எழுத்தும் பகவானைச் சொல்வது மாதலால் பகவானது மூச்சுக்காற்ருக உள்ள வேதங்கள்கூட முதல் முதலாக தனது முதல் மந்த்ரமான முதல் ரிக்கில் முதல் எழுத்தாக அகாரத்தையே "अग्निमीळे पुरोहितम्" (அக்நிமீளே புரோஹிதம்) ஆரம்ப அக்ஷரமாகக் கொண்டு ஓதப்படுகிறது.

இப்படியாக வடமொழி வேதத்தையும் வேத ப்ரதிபாத்யனை பகவானின் பெயரும் அகாரம் எனும் சூக்ஷும விஷயத்தைத் தெரிந்து கொண்டே பூஜ்யரான திருவள்ளுவரும் தன் முதல் குறளில் முதல் எழுத்தாக அகாரத்தை உபயோகப்படுத்தி "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" என அகாரத்தை முதலாக வைத்து தனது பாக்களைப் பாடியுள்ளான். எனவே அகாரம் என்ருல் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் என்பது மிகத் தெளிவு. ✠

திரு. சி. சீனிவாசன் - திருமலை.

# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

## அடைந்தாரைக் காப்போன்!

**உலகம் யாவையும் தாமுள வாக்கலும்**
**நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா**
**அலகிலாவிளை யாட்டுடை யாரவர்**
**தலைவர் அன்னவர்க் கேசரண்**
**நாங்களே!**

(கம்பர் பாடல்.)

இராமாயணம் ஒரு சரணாகதி வேதம். இராமாயணத்தின் தொடக்கம் முதல் இறுதிவரையிலும் தேவர் முதலாகப் பல்வேறு உயிரினங்களும் இராமபிரானைச் சரணடைந்து உய்வு பெறுதலைக் காண்கிறோம். கம்பரும் தன் கடவுள் வணக்கப்பாடலில் இதனை நுட்பமாகக் குறிப்பிடுகிறார். ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் விளையாட்டாகச் செய்யும் தலைவரே நாம் அடைக்கலம் புகுதற்குரியவர் என்பதைத் தெளிவுபடுத்துகிறார். இராமபிரான் சரணாகத வத்சலன் என்பதும் நம்மால் பற்றுதற்குரியவன் அவனே என்பதும் புலப்படுகின்றதன்றோ!

நம்மால் பற்றுதற்குரியவன் எத்தகையவனாக இருத்தல் வேண்டும்? ஆற்றல், அன்பு, அருள், அழகு, ஒழுக்கம், பண்பு முதலான எல்லாச் சிறப்புக்களும் மிக்கவனாக இருத்தல் வேண்டும். நாம் யாரைச் சரணடைகிறோமோ, அவனைக் காட்டிலும் மேலான பொருள் உலகில் இருத்தல் கூடாது. எனவே, நாம் சரணடைதற்குரியவன் இராமனே என்பது நன்கு விளங்கும்.

ஒரு வில், ஒரு சொல், ஒரு இல் (மனைவி) எனக்கொண்டு விளங்கியவன் இராமன். அன்பின் விளக்கத்தை அவனிடம் காணலாம். வேடர் தலைவனையும் (குகன்), வானரர் தலைவனையும் (சுக்ரீவன்), அரக்கர் குலத் தலைவனையும் (விபீடணன்) விரும்பித் தம்பியராக ஏற்றுக்கொண்ட வித்தகன்! 'நடையில் நின்றுயர் நாயகன்;' நாம் இழைத்த வல் இருவினைக்கு ஈறாக நிற்பவன்! வள்ளல் இராமன் அறத்தின் வடிவம்! காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சர்யம் எனப்படும் உட்பகை ஆறனையும் ஒருங்கே வென்ற வீரன்! இறைவனுக்குரிய குணங்களாகக் கூறப்படும் ஞானம், சக்தி, பலம், ஐஸ்வரியம், வீர்யம், தேஜஸ் ஆகிய ஆறினையும் தன்னகத்தே கொண்ட அண்ணல்! கல்லைப் பெண்ணாக்கியும், சிவதனுசை ஒடித்தும், பரசுராமரின் கர்வத்தைப் பங்கம் செய்தும், சேதுவில் அணைகட்டியும் தன் மேலாம் தன்மையைத்(பரத்வம்)தரணிக்குணர்த்தியவன்! ஆயிரம் நாவாலும் அளந்து கூற முடியாத இன்னோரன்ன சிறப்புக்கள் நிரம்பிய இராமபிரானைக் காட்டிலும் நாம் சரண்புகுதற்குரிய வேறோர் தெய்வம் விண்ணிலும் மண்ணிலும் உண்டோ? விளம்புமின்.

சமுதாயக்களைகளாக விளங்கிய கொடியவரைச் சாய்த்தவன்! பகைவனுக்கும் அருளும் பண்பினன்! இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்பினன்! வஞ்சகம் கலவாத திரேதா யுகத்தின் வடிவழகன்! இவ்வள்ளலின் வரலாறு முழுதுமே சரணாகதியை விளக்குவதாக உள்ளது என்பதற்கான சான்றுகள் சிலவற்றைச் சுருங்கக் காண்போம்.

இராமாயணத்தின் தொடக்கமே சரணாகதிதான்! அரக்கர்கள் அமரர்களுக்கு அல்லல் விளைவிக்கின்றனர். அல்லலுக் காற்றாத அமரர்கள் பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் பரந்தாமனைச் சரணடைகின்றனர்.

''திருவின் நாயகரே! பத்துத்தலையுடையவனாலும், அவன் தம்பியர் உறவினர் முதலானோராலும் நாங்கள் படும் துன்பத்திற்கு அளவேயில்லை. விண்ணும் மண்ணும் தாங்கள் இயற்றும் தவத்தை மறந்தன. தங்களையன்றிச் சரண்புக நாங்கள் வேறு எங்கு செல்வோம்!'' எனத் தேவர்கள் திருமாலிடம் முறையிட்டனர். அமரர்கள் குறை கேட்டு மனமிரங்கினார் அச்சுதன்!

''தேவர்களே! அஞ்சாதீர்கள்! அரக்கர்கள் பொடிபடத் தசரதன் மதலையாய்த் தாரணியில் நான் அவதரிப்பேன், சங்கு, சக்கரம், ஆதிசேடன் ஆகியவையும் என் தம்பியராக அப்போது தோன்றும். அயோத்தியில் வந்து நான் அவதரித்த பின் உங்கள் குறை தானே அகலும்! சென்று வருக!'' என்று அபயமளித்தார் திருமால்.

'' மசரத மனையவர் வரமும் வாழ்வு
மோர்
நிசரத கணைகளால் நீறு செய்யயாம்
கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதும் தாரணி;

வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளைஞர்க ளௌனவடி பரவ வேகிநாம்
வளைமதில் அயோத்தியில் வருதும்.''

என்றனன். திருஅவதாரப் படலம் 21, 22. இது பாலகாண்டச் செய்தி. இனி, அயோத்யா காண்டத்தில் காணப்படும் சரணாகதி நிகழ்ச்சியைக் காண்போம்.

கைகேயி தசரதனிடம் வரங்கள் இரண்டினை வேண்டிப் பெறுகிறாள். அவ்வரங்களுள் ஒன்று இராமன் காடாள வேண்டும் என்பது. சிற்றன்னையின் சொல்லைச் சிரமேற்

கொள்கிறான் சீதாராமன்! அண்ணன் கானகம் செல்லும் செய்தி தம்பி இலக்குவனுக்கு எட்டிற்று. இலக்குவன் ஓடோடி வருகிறான். தன்னையும் கானகம் அழைத்துச் செல்ல வேண்டுகிறான். ஆனால், இராமபிரானே தம்பியை அயோத்தி மக்கட்கு ஆதரவாக இருக்குமாறும், தன்னோடு கானகம் வர வேண்டாம் என்றும் எடுத்துக் கூறுகிறான். உயிரனைய உடன் பிறப்பைப் பிரிந்து வாழ உத்தமன் இலக்குவன் ஒருப்படுவானா?

தன்னையே கதியென்று நம்பியிருக்கும் தம்பியைப் பிரிந்து செல்லத் தசரத ராமனுக்குத் துணிவு வரவில்லை. அவன் சரணாகத வத்சலன் அல்லவா? தன்னையடைந்த தம்பியையும் தன்னுடன் கானகம் வருமாறு மௌனம் சாதிப்பதன் மூலம் ஒப்புதல் தருகிறான்.

இது இலக்குமண சரணாகதி. இனிப் பரதனின் சரணாகதியைக் காண்போம்.

அயோத்தி நகரைவிட்டு நீங்கிய இராமன் சித்திர கூட மலையையடைந்து அங்கே சில நாள் தங்கியிருக்கிறான். அண்ணனைக் காணப் பரதன் அயோத்தியிலிருந்தும் ஓடோடி வருகிறான். அண்ணலைக் கண்டு அவன் திருவடிகளே சரணம் எனப்பற்றிக் கதறியழுகிறான். அப்போது ஆறுதல் கூறிப் பரதனுக்குப் பாதுகையும் தந்து அபயம் அளிக்கிறான் அண்ணன் இராமன்!

சித்திர கூடத்திலேயே மற்றொரு நிகழ்ச்சியும் நிகழ்கிறது. சித்திர கூடத்தில் சீதா பிராட்டியின் மடி மீது தலைவைத்துப் படுத்திருக்கிறார் இராமபிரான். அப்போது இந்திரன் மகனான சயந்தன் காக்கை வடிவு கொண்டு பிராட்டியின் திருமார்பைத் தீண்டுகிறான்! இதனையறிந்த இராமபிரான் சயந்தனை நோக்கி அம்பொன்றை ஏவுகிறார். தன்னைத் துரத்தும் அம்பிலிருந்து விடுபடப் பலரைத் தஞ்சம் அடைகிறான். ஆனால், அனைவரும் கைவிட்டு விடுகின்றனர். இறுதியில் இராமபிரானையே சரணமாக வந்தடைகிறான். தீங்கு செய்ததால் தண்டனை பெற வேண்டியவனும் தன்னைத் தஞ்சம் என்றடைந்ததால், காகாசுரனுக்கும் வாழ்வளிக்கிறார் காகுத்தன்.

'' ஐயநின் சரணஞ்சர ணென்றவன்
அஞ்சி
வையம்வந்து வணங்கிட வள்ளல்
மகிழ்ந்தே
வெய்யவன்கண் இரண்டொடு
போகென விட்ட''

இச்செய்தியைக் கொண்டு இராமபிரானின் அளப்பரும் அருள் தன்மையை அறிய முடிகிறதன்றோ!

அயோத்யா காண்டத்தை அடுத்துவரும் ஆரண்ய காண்டத்தும் சரணாகதியின் சிறப்பு பரக்கப் பேசப்படுகிறது. அது பற்றிச் சிறிது காண்போம்.

அரக்கர்களால் காட்டில் வாழும் முனிவர்களுக்கு அல்லல் உண்டாகிறது. செய்தவறியாது சாதுக்களாகிய முனிவர்கள் அரக்கர்கள் இழைக்கும் அல்லலைத் தாங்கவொண்ணாது வருந்தி வாடி வருகின்றனர். அப்போது, அயோத்தியை விட்டு நீங்கிய இராமன் தண்ட காரண்யம் சேர்கிறான். அவன் வரவு 'வாடிய பயிருக்குக்கிடைத்த வான் மழை போல'ப் பெருமகிழ்வினைத் தருகிறது முனிவர்கட்கு. "இராமா! அபயம்!" எனக் கூறிச் சீதாராமனைச் சரணாகக் கொள்கின்றனர் சாதுக்கள்!

தன்னைச் சரணடைந்த சாதுக்களுக்கும் தஞ்சமளித்தான் ஸ்ரீ ராமன்! சாதுக்களுக்கு மட்டுமா அபயம் அருளினான்! சகல மிருக ராசிகட்கும் கூடத் தஞ்சம் தந்தான் தாசரதி!

அடுத்துக் கிட்கிந்தா காண்டத்தில் பேசப் பெறும் சுக்ரீவ சரணாகதியைப் பற்றிக் காண்போம். பஞ்சவடியில் பிராட்டியைப் பிரிந்த இராமபிரான் சீதையைத் தேடிவரும் பொழுது கிட்கிந்தை எனப்படும் மலையை அடைகின்றார். இராம இலக்குவரை அனுமன் கண்டு கொள்கிறான். தன் தலைவனாகிய சுக்ரீவனுக்கு இராமனை அறிமுகம் செய்து வைக்கிறான் அனுமன்! தன் அண்ணனாகிய வாலி தனக்கு இழைக்கும் கொடுமை பற்றித் தசரத ராமனிடம் சுக்ரீவன் எடுத்துக்கூறி அபயம் கோருகிறான்.

'' மூரணுடைத் தடக்கை யோச்சி
முன்னவன் பின்வந் தேனை
இருள்நிலைப் புறத்தின் காறும்
உலகெங்கும் தொடர அக்குன்று
அரணுடைத் தாகி யுய்ந்தேன் ஆருயிர்
துறக்க லாற்றேன்
சரண்உனைப் புகுந்தேன் என்னைத்
தாங்குதல் தருமம் என்றான்.''

(நட்புக் கோட் படலம் 25.)

சரணாகப் புகுந்த சுக்ரீவனைத் தாங்கியது மட்டுமன்றித் தன் தம்பியாகவும் ஏற்றுக் கொண்ட தண்ணளியை என்னென்று வியப்பது?

அடுத்துச் சுந்தர காண்டத்தில் சரணாகதியின் சிறப்பை அன்னையிடம் காண்கிறோம். இராவணன் தம்பி விபீடணன். விபீடணன் மகள் திரிசடை. தந்தையைப் போலவே மகளும் மிகவும் நல்லவள். அசோகவனத்தில் அரக்கியர் பலரும் சீதைக்குக் காவலாக இருந்து வருத்தி வருகின்றனர். ஆனால், திரிசடை மட்டும் சீதைக்கு உற்ற தோழியைப் போல இருந்து உதவி புரிகிறாள். பிராட்டியைத் தஞ்சம் என்று அடைந்து, அசோக வனச் சீதைக்குப் பணிவிடை செய்யும் திரிசடையைச் சுந்தர காண்டத்தில் காண்கிறோம். திரிசடை பிராட்டியைச் சரண் எனப் பற்றியதால் தான், யுத்த முடிவில் அரக்கரும் அரக்கியரும் அழிந்து படவும் திரிசடை மட்டும் அழியா நல்வாழ்வை அடைந்தாள். இது திரிசடா சரணாகதி.

சரணாகதியின் சிறப்பை உலகே வியந்து பாராட்டும் நிகழ்ச்சி யுத்த

காண்டத்தில் சிறப்பாகப் பேசப்படு கிறது.

இராவணன் இராமனின் மனைவியைக் கவர்ந்தவன். எனவே, இராவணன் இராமனுக்குப் பகைவன். பகைவன் தம்பி விபீடணன். விபீடணனுக்கு இராவணன் செயல் பிடிக்கவில்லை. எனவே, சீதையைச் சிறை விடுமாறு செப்புகிறான் விபீடணன். தம்பியின் அறிவுரை கேட்டு அண்ணன் சீறினான்! தன்னை விட்டுப் போய் விடுமாறும் அச்சுறுத்தினான். தீயவனோடு சேர்ந்து உயிர்வாழ்தலைக் காட்டிலும் நல்லவரோடு சேர்ந்து உயிர் விடுதலே பெருமைக்குரிய செயல் என்று விபீடணன் எண்ணினான். எனவே, இராமபிரானைச் சரணடைய இலங்கையிலிருந்தும் புறப்பட்டு விட்டான். இச்செய்தி இராகவனுக்கும், சுக்ரீவன் அனுமன் முதலானோர்க்கும் எட்டியது. பகைவனின் தம்பியைத் தங்கள் பக்கம் சேர்த்துக் கொள்ள யாரும் விரும்பவில்லை. ஆனால், அனுமன் மட்டும் விபீடணனைச் சேர்த்துக் கொள்வதால் நலம் விளையும் என்று இராமனிடம் எடுத்துக் கூறினான். சொல்லின் செல்வன் வடித்துச் சொன்ன மாற்றத்தைக் கேட்டு இராமன் வியப்புற்றான். விபீடணனுக்கு அடைக்கலம் அளிப்பதால் எது நேரினும் ஏற்க இராமன் சித்தமாகி விட்டான். அடைந்தாரைக் காப்பது ஒன்றே அண்ணல் இராமனின் நன்னெறியாக இருந்து வந்தது. அடைக்கலச் சிறப்பை எடுத்துக் கூறும் இராமபிரானின் திருவாக்கைக் கேட்போம்.

'' மற்றினி உரைப்ப தென்னே?
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி அன்ன
தன்றெனில் பிறிதொன் றுனும்
வெற்றியே பெறுக, தோற்க,
வீக, வீ யாது வாழ்க,
பற்றுதல் அன்றி உண்டோ,
அடைக்கலம் பகர்கின் றனே? ''

என்று இராமபிரான் அழுத்தம் திருத்தமாகக் கூறி அடைக்கலம் தர முடிவு கட்டி விட்டார். தன்னைச் சரணடைந்தவனை ஆதரிக்காது விடுவதைக் காட்டிலும் இறந்து போவதையே மேலாகக் கருதும் அளவுக்கு அவர் உள்ளம் விரிவடைந்து நிற்றலைக் காண்கிறோம்.

நாட்டைக் கொள்ளையடித்த வெள்ளையனையும் நல்லவனாகவே கருதிய காந்தியடிகள் உள்ளம் இராமாயணத்தைக் கற்றதனால்தான் உயர்வு பெற்றது போலும்!

பகைவனுக் கருளும் பண்பைப் பாருக்குணர்த்தவே இராமாவதாரம் நிகழ்ந்தது என்றால், இதில் ஒன்றும் வியப்பில்லை.

அடுத்துப் பிராட்டியும் இவ்வாறே பகைவரிடம் பண்புடன் நடந்து கொள்ளுதலைப்பற்றி ஒரு சிறிது அறிவோம்.

இராவணன் மாண்டு போன செய்தியை அனுமன் பிராட்டியிடம் அசோகவனம் சென்று கூறுகிறான். காவலாக இருக்கும் அரக்கியரை அப்போது அனுமன் காண்கிறான். அவனுக்கு ஆத்திரம் பொங்கி வருகிறது. அனுமனின் சீற்றத்தைக் கண்டு அரக்கியர் அஞ்சுகின்றனர். அன்னையின் அடிமலரைப் பற்றுகின்றனர். 'அபயம்!' என்கின்றனர். ''எய்தவன் இருக்க அம்பை நோவதேன்? எனக் கூறி அனுமனை அமைதி கொள்ளச் செய்கிறார் அன்னை! அரக்கியர்க்கு அபயமும் அளிக்கிறார்.

தன்னை நெருக்கிவந்த அரக்கியர்க்கும் இரக்கம் காட்டித் தண்ணருள் புரிந்த உலகமாதாவின் திருவடிகளைச் சதா நாமும் தியானம் செய்வோமாக!

அனுமன் சீற்றத்தையும், அரக்கியர் நடுக்கத்தையும், அன்னையின் அருள் மனப்பான்மையையும் கம்பன் வாக்காலேயே காண்போம்.

'' குடல் குறைத்துக் குருதிகு டித்திவர்
உடல் முருக்கியிட் டுண்குவேன்
என்றலும்
அடல் அரக்கியர் அன்னைநின் பாதமே
விடலமெய்ச்சரண் என்றுவி
ளம்பலும்,

அன்னை அஞ்சன்மின் அஞ்சன்மின்
நீரென
மன்னு மாருதி மாமுகம் நோக்கிவே
வறன்ன தீமை இவரிழைத் தாரவன்
சொன்ன சொல்லின தல்லது
தூய்மையோய்! ''

*மீட்சிப்படலம் 33, 34.*

இதுகாறும் அறிந்தவற்றால் இராம காதையின் தொடக்கம் முதல் இறுதி வரை சரணாகதியின் சிறப்பே எடுத்துக் கூறப்பட்டுள்ளதைக் கண்டு மகிழ்கிறோம். சமுதாய சீர்திருத்தம் விழைவோர் இராமபிரானின் சகோதர நேயத்தை உணர்ந்து அவ்வழியிலேயே நடத்தல் உலகை நன்னெறிப்படுத்த உதவும்,

'' குகனொடும் ஐவரானோம் முன்புபின்
குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம்
எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதல்ஐய நின்னொடும்
எழுவ ரானோம்
புகலரும் கானம்தந்து புதல்வரால்
பொலிந்தான் உந்தை ''

*விபீடணன் அடைக்கலப்படலம் 146.*

விபீடணனிடம் கூறும் இராமபிரானின் இக்கூற்று இன்றைய உலகுக்குப் பெரிதும் பயன் படுவதாகும்.

அனைவரும் இராமபிரானையே சரணம் அடைந்ததன் காரணம் என்ன? அவர் மிகவும் நல்லவர் என்பதால் தான்! நற்குணங்கள் பலவும் நிரம்பப் பெற்ற இராமபிரானை அனைவரும் நல்லவராகவே கண்டனர். பகைவனான இராவணனும் இராமபிரானை நல்லவன் என்றே தன் வாயாரப் பாராட்டுகிறான்.

இராவணன் முதலான அனைவரும் இராமனை நல்லவன் என்று புகழக் காரணம் என்ன? இராமனைச் சார்ந்துள்ள அத்தனை பேரும் நல்லவர்களே! எனவேதான் இராமன் நல்லவனாக விளங்க முடிந்தது.

நாம் நல்லவர்களாக வாழவேண்டுமென்றால் நம்மைச் சார்ந்தவர்களும் நல்லவராகவே இருத்தல் வேண்டும். இந்த உண்மையையும் இராமாவதாரம் உணர்த்தி நிற்கிறது. இராமனைக் காட்டிலும் இராம நாமத்துக்கு மகிமை அதிகம். இராமனைச் சரணடைந்து இராமநாமம் கூறி இன்பங்கள் பலவும் பெற்று வாழ்வில் உயர்வோமாக.

(தொடரும்)

# கல்லும் கல்வியும்



எங்கோ கிடந்தது ஒரு கல். கல்லோடு கல்லாக நெடுநாள் அது அப்படியே கிடந்தது. மழையில் நனைந்து வெய்யிலில் காய்ந்து கேட்பாரற்று அது அங்கே கிடந்தது. கல்தானே! உயிரற்றது; உணர்வற்றது. அதை யார் கவனிப்பர்! அடுத்த வீட்டில் வசிப்பவர் யார் என்பதைக் கூட தெரிந்து கொள்ளாத — தெரிந்து கொள்ள விரும்பாத-அளவிற்கு நம்மவரது வாழ்க்கை அமைந்து விட்ட இந்நாளில், கேவலம் அக்கல்லை யார் கவனிப்பர். அப்படியே எத்தனை காலம் அது கிடந்ததோ! யார் அறிவார்?

பொதுவாக மக்கள் அந்த வழியே செல்வதில்லை. ஏனெனில் அது ஒரு மலைப்பாங்கான இடம். பாறைகள் நிறைந்த பகுதி. இயந்திர மயமாக வாழ்க்கை நடத்தும் இன்றைய மக்களுக்கு அது போன்ற இடங்களில் என்ன வேலை? தன் கையிலிருந்த ஒரு சிற்றுளியால் ஒவ்வொரு கல்லாகத் தட்டிப் பார்த்தான் அவன். ஒரு கல்லும் அவனுக்கு திருப்தி அளிக்கவில்லை. திடீரென்று ஓர் இடத்தில் நின்று விட்டான். ஆமாம், அந்தக் கல் தான் அவனை நிற்கச் செய்து விட்டது. அவன் ஒரு சிற்பி. சிற்பிக் கல்லவா கல்லின் தரம் தெரியும். அந்தக் கல்லின் மீது ஒரு குறியிட்டான்.

வெகு நாட்களாகக் கேட்பாரற்றுக் கிடந்த அந்தக் கல்லை இப்பொழுது அங்கே காணோம். எங்கே போயிற்று அது? அது அந்த சிற்பியின் வீட்டு முற்றத்தை இப்பொழுது அலங்கரித்துக் கொண்டிருந்தது. எப்படியோ இருந்த அந்தக் கல் சிறிது சிறிதாக மாற்றத்துக்குள்ளாகிக் கொண்டிருந்தது. சிற்பி தன் கையிலிருந்த சிற்றுளியால் அதன் தேவையற்ற பாகங்களைச் செதுக்கித் தள்ளினான். இரவும் பகலும் சிற்பியின் கவனம் முழுவதும் அக்கல்லிற்கு நல்லதொரு உருவம் கொடுப்பதிலேயே இருந்தது.

அன்று அந்தச் சிற்பம்-இனிமேல் அது வெறும் கல்லல்ல-முழுவடிவம் பெற்று விட்டது. அந்தச் சிற்பி அதன் எதிரேநின்று கொண்டு அதன் அழகை ரசித்துக் கொண்டிருந்தான். அந்தச் சிற்பம் உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன், நிலவுலாவிய நீர் மலிவேணியனும் சிவபெருமானுடைய அழகிய வடிவத்தைத் தாங்கி நின்றது. மிகவும் கவர்ச்சிகரமான தோற்றம் அது. பார்ப்போருக்கெல்லாம் பக்தியை யூட்டும் தன்மையதாய் அது விளங்கியது. சிற்பி தனது கைத்திறனையெல்லாம் அதில் கொட்டியிருந்தான் எனில் அது மிகையாகாது. பார்த்தவர் அனைவரும் 'இது வன்றோ சிற்பம், இவனன்றோ சிற்பி' என மனமாரப் புகழ்ந்தனர்.

ஒரு நாள், அந்த சிற்பம் சிற்பியின் வீட்டு முற்றத்தில் காணப்படவில்லை. எங்கே போயிற்று அது? அந்த ஊர்க் கோவிலில் பிரதிஷ்டை செய்யப் பட்டு வழிபடு மூர்த்தியாகக் காட்சி தந்தது. இப்பொழுது அது வெறும் கல்லுமல்ல. அழகிய சிற்பமுமல்ல. ஆனால் பக்தர்கள் பணிந்தேற்றும் திருவுருவம். கல்லாக இருந்தது சிற்பமாக மாறி விட்டது. அதனது படிப்படியான வளர்ச்சி இப்பொழுது பூரண நிலையை எய்திவிட்டது. இனி

'சீலன்' - மதுரை.

மேல் அது மேற்கொண்டும் உயர்ந்ததொரு நிலையை அடைய முடியுமா? முடியாது. கல் என்ற அளவில் அது தான் அதனது இறுதி வளர்ச்சி நிலை.

கல்லாக இருந்த நிலையில் அது அனைவராலும் புறக்கணிக்கப்பட்ட நிலைமையில் இருந்தது. அதைக் கண்ணெடுத்துப் பார்ப்பார் யாருமில்லை.

சிற்பமாக மாறிய நிலையில் அது பார்ப்போரது மனத்தில் மகிழ்ச்சியை உண்டு பண்ணியது. பார்த்தவர் அதனது அழகை வியந்தனர். அழகுப் பொருளாக மட்டுமே அது காட்சி தந்தது.

விக்கிரகமாகக் கருதப்பட்ட நிலைமையில் அதன் அழகோடு அருளும் சேர்ந்து கொண்டது. இப்பொழுது அழகு பின்னணிக்குச் சென்று விட்டது. அருள் முன்னணியில் நின்றது. இப்பொழுது அது இறைவனின் திருவுருவம். அதனது படிப்படியான வளர்ச்சியின் உச்சக்கட்டத்தை அது அடைந்து விட்டது எனலாம்.

கல்லாக இருந்து சிற்பமாக மாறி விக்கிரமாகத் திகழும் நிலையில் அது நமக்குப் புகட்டும் பாடம் எது? சிந்திப்போமாக!

மேற்கூறியதனைத்தையும் மனித வாழ்க்கையுடன் ஒப்பிட்டு நோக்குங்கால், மாபெரும் உண்மை ஒன்றைப் புரிந்து கொள்ளலாம். முதலில் கல்லானது பண்படாத, அதாவது கரடு முரடான நிலையில் இருந்தது. அப்போது அதைத் தீண்டுவார் யாருமில்லை. அது பண்படுத்தப்பட்ட பிறகு மாபெரும் மாற்றத்தையடைந்தது. அதே போன்று கீழ்மைகள் பல நிறைந்து பண்படாத மனிதன் அக்கீழ்மைகள் அகன்று பண்பட்டவனுகிற பொழுது விலங்கு நிலையிலிருந்து மனித நிலைக்கு மாறிப் பிறகு அதனிலும் மேம்பட்ட தெய்வ நிலையாம் பெருநிலையை யடையலாம் என்பதை அது நமக்கு எடுத்துக் காட்டுகிறது. இத்தகையதொரு மாபெரும் பணியை நேரிய கல்வி ஆற்றுகிறது.

விலங்குணர்ச்சிகள், மனித உணர்வுகள் தெய்வீக ஆற்றல்கள் இவை யனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றவன்தான் மனிதன். இம்மூன்றில் எது மிகுந்து காணப்படுகிறதோ அதற்கேற்ப அவனுடைய தன்மையும் மாறி அமைகிறது. கல்லுதல் என்ருல் தோண்டுதல் எனப்பொருள். எனவே கல்வி மனிதனிடத்தில் மறைந்து கிடக்கும் அரிய சக்திகளை வெளிக் கொணரும் தன்மையதாய் அமைய வேண்டும். வேதாந்தக் கருத்துப்படி மனிதன் அடிப்படையில் இறைவனிலிருந்து வேறுபட்டவன் அல்லன். அஞ்ஞானத்தின் காரணமாக மாயையின் வயப்பட்டு அவன் தனது யதார்த்த நிலையை

# திருப்பதியில் தங்குவசதி விவரங்கள்

| | அறைகளின் எண்ணிக்கை | வாடகை | நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|
| I ஸ்ரீநிவாசா சத்திரம் (முதல் சத்திரம்) பேருந்து நிலையத்திற்கு அருகில். | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டுபடுக்கை வசதிகளைக் கொண்டது | 30 | ரூ. 12/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் நான்கு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 18 | ரூ. 15/– | ,, |
| (iii) மேஜை நாற்காலிகள் ஒருபடுக்கை வசதி கொண்டது. | 39 | ரூ. 10/– | ,, |
| II ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி | | | |
| மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 16 அறை தொகுதிகள் | ரூ. 16/– | ,, |
| III ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) | 10 அறைதொகுதிகள் | ரூ. 40/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் ஒரு படுக்கை வசதி கொண்டது (குளிர்சாதனம் பொருத்தப் பட்டது) | 2 அறைதொகுதிகள் | ரூ. 30/– | ,, |

உணரச் செய்வதுதான் கல்வியின் அடிப்படை நோக்கமாக அமைகிறது.

இன்றைய கல்வி முறையை சற்று ஆராய்வோமேயாகில் மனிதனது ஒரு பகுதியை அது முற்றும் புறக்கணிக்கிறது என்ற உண்மையை உணரலாம். புறவுலகத்தைப் பற்றிப் பெருமளவு புகட்டும் இன்றைய கல்வி மனிதனது ஆன்மீக வளர்ச்சியைப் புறக்கணித்து நிற்கிறது. உடலை வளர்க்கக் கற்றுக் கொண்ட மனிதன் உள்ளத்தைப் பண்படுத்தக் கற்றுக் கொண்டானில்லை. எந்தக் கல்வி மனிதனிடம் அன்பு, அறிவு, ஆற்றல் ஆகிய மூன்றையும் ஒருங்கே வளர்ச்சியடையச் செய்கிறதோ அதுவே உயர் கல்வியாகவும், உண்மைக் கல்வியாகவும் அமைகிறது. அநேகக் கலைகளையெல்லாம் கற்றுத் தெரிந்து தனது மனத்தைப் பண்படுத்தத் தெரியாதவன் கற்ற கல்வி பெரிதும் பழுதுடையதாக ஆகிறது.

இன்றைய நிலையில் கல்வித் துறையில் சமயக் கல்வியின் அவசியம் மிகவும் உணரப்படுகிறது. கல்லூரிகளும், பள்ளிகளும் எண்ணிக்கையில் மிகவும் பெருகி வருகின்றன. எண்ணிக்கைகள் பெருகுவது ஒரு புறம் இருக்கட்டும். அதே சமயத்தில் கல்வியின் தரம் குறைகிறது. மாணவர்களிடம் கட்டுப்பாடு மற்றும் ஒழுங்கின்மை நாளுக்கு நாள் பெருகி வருகிறது. சில வேளைகளில் கல்விக் கூடங்கள் கலவரக் கூடங்களாகக் காட்சி தருவது மிகவும் பரிதாபத்திற்குரிய விஷயமாகும். இவற்றிற்கெல்லாம் காரணங்கள் நாம் பல கூறலாம். எனினும், அடிப்படைக் காரணம் சமயக் கல்வி இன்றையக் கல்வி முறையில் இடம் பெறாததேயாகும்.

சமயக் கல்வியை கல்வித் திட்டத்தில் சேர்ப்பது என்ற விஷயத்தில் பல பிரச்சினைகள் எதிர்ப்படுகின்றன. நமது நாடு எந்த ஒரு குறிப்பிட்ட மதத்தையும் சார்புடைத்தன்று. சுதந்திரம் பெற்றவுடனேயே பாகிஸ்தான் தன்னை ஒரு முஸ்லீம் நாடு என்று பிரகடனப் படுத்திக் கொண்டது. ஆனால் நாமோ "மத சார்பற்ற நாடு" என்ற கொள்கையை பின்பற்றி வருகிறோம். மத சார்பற்ற நாடு என்னும் பொழுது ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சாராதது என்பது தான் பொருளேயன்றி, மதத்தைப் புறக்கணித்தது என்பதாகாது. மத சார்பற்ற தன்மையைப் பின்பற்றி வருவதால் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் மத போதனை இடம் பெறக் கூடாது என்ற வாதம் ஏற்றுக் கொள்ளப்பட முடியாததாகும். உண்மையில் அனைத்து மதங்களின் அடிப்படைக் கருத்துக்களும் ஒரே கருத்தையே வலியுறுத்துகின்றன. சமயங்களில் காணப்படும் ஒழுக்க நியதிகளும், நீதி போதனைகளும் கல்வித் திட்டத்தில் இடம் பெறல் வேண்டும்.

பௌதிகம், இரசாயனம், தமிழ், ஆங்கிலம் போன்ற இதர பாடங்களில் இத்தனை மதிப்பெண்கள் வாங்கினால்தான் தேர்வு உண்டு என்பது போன்று, சமயப் பாடங்களும் கட்டாயப் பாடமாக்கப்படுதல் வேண்டும். இதற்கென தனியாகப் பயிற்றுவிக்கப்பட்ட ஆசிரியர்கள் நியமிக்கப்பட வேண்டும்.

இந்த சமய வகுப்புக்களில் ஒரு குறிப்பிட்ட சமயத்தைக் குறித்த எந்த விதமான மாறுபட்ட கருத்துக்களேயும் மாணவர்கள் மனத்தில் திணிக்காது பார்த்துக் கொள்ளுதல் மிகவும் முக்கியமானதாகும். காந்திய முறையில் மாணவர்கள் பயிற்றுவிக்கப் படல் வேண்டும். விடுமுறை நாட்களில் குழுக்களாகப் பிரிந்து இளைஞர்கள் அருகாமையிலுள்ள கிராமங்களுக்குச் சென்று சமூக சேவையிலீடுபடுதல், அடிக்கடி ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று நோயுற்றவர்களுக்குத் தேறுதல் சொல்லுதல், கீதை போன்ற சமய நூல்களைப் படிக்கத் தனியாக வகுப்புகள் நடத்துதல், பிற மதங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள விசேஷ சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தல், அனாதை மற்றும் ஏழை மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி கற்பித்தல் போன்றவையனைத்தும் சமயக் கல்வியின் செயல்முறை அம்சங்களாக இடம் பெறுதல் இன்றையக் கல்வி முறையை பெரிதும் சீர்படுத்த உதவிகரமாக அமையும்.

மேற்கூறிய முறையில் கல்வித் திட்டத்தில் சமயக் கல்வி உரிய இடத்தைப் பெறின் மாணவர்களின் மற்றும் இன்றைய இளந்தலை முறையினரின் வாழ்வில் கண்டிப்பாக மறுமலர்ச்சி ஏற்படும் என்பது உறுதி. தவிர எதிர்கால இந்தியாவிற்கு நல்ல குடி மக்களை உருவாக்கும் மாபெரும் பணியையும் நாம் செய்தவர்களாவோம்.



---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

பகவானும் குகையினின்று வெளிவந்து, ஆலமரத்தடியில் தவம் செய்யும் ஸத்யரிஷியை அடைந்து, தன்னுடைய திவ்யமங்கள ஸ்வரூபத்தைக் காட்டி ரிஷியிடம் "ஆலமரத்தின் கீழ் தவம் செய்யும் புரூரவ சக்ரவர்த்தி இவ்விடம் வந்தவுடன் உமக்கு மோக்ஷம் தருகிறேன் என்று முன்னொருகால் கூறியபடி செய்தேன்" என்று சொல்லி ஸத்யரிஷிக்கு தன்னிடத்தில் வசிக்கும் படியான ஸ்தானத்தைக் கொடுத்தான். "புரூரவ சக்ரவர்த்திக்கு பகவான் ப்ரத்யக்ஷமாகும் சமயத்தில் நீ அவருடைய ஸமீபம் அடைந்து பாபம் நீங்கப் பெறுவாய்" என்று துர்வாஸ மஹரிஷி தனக்கு சொன்னதை நினைவிற் கொண்டு தக்ஷகன் பாம்பினுருவைவிட்டு பகவானுடைய ஸமீபமடைந்தான். புரூரவஸ் சக்ரவர்த்தி, "ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனே வராஹமாக வந்து தன்னையாட்கொண்டு லீலா விநோதம் நிகழ்த்தினார்" என்று புளகாங்கிதமடைந்து தனக்கு ஞான சக்தியைத் தருமாறு பகவானிடம் ப்ரார்த்திக்க, பகவானும் "ஸத்திய மஹரிஷி என்னை ஆராதித்தவாறு செய்வாயாகில் மூன்று வருடம் கழிந்த பின்பு,

உனக்கு நம் திருமேனியைக் காட்டி என் ஸ்தானமான வைகுந்தத்தைக் கொடுப்பேன்'' என்று திருவாய் மலர்ந்தருள புரூரவஸ் சக்ரவர்த்தியும் ஸத்தியகிரிநாதனை மூன்று வருடம் ஆராதித்து, குமாரனுன கமலநயனைக் கொண்டு திருப்பணிகள் செய்வித்து உத்தமபதத்தையடைந்தான்.

## தக்ஷகன் கதை

துர்வாஸ மஹரிஷி உடுக்கும் வஸ்த்ரமின்றி ஸஞ்சரிக்கும் போது ஒரு நாள் விஷ்ணுவைத் தரிசிக்க வேண்டிச் செல்ல, காவல் புரிந்த தக்ஷகன் இவருடைய அவதூத வேஷத்தைக் கண்டு தடுத்தான். மஹரிஷி கோப மடைந்து பாம்பினுருவை அடைவாய் என்று சபித்தார். தக்ஷகனும் பாம்பினுருவுடன் பகவானை அடைந்து தனக்கு நேர்ந்த சாபத்தைத் தெரிவிக்க, பகவானும் "ப்ராம்மணனுடைய சாபத்தை மாற்றுவதற்கு பிரும்மா, இந்திரன், ருத்ரன் முதலியவர்களால் முடியாது. ஆகையால் மஹரிஷியை சரணமடைவாய்'' என்ருர். தக்ஷகனும் துர்வாஸ மஹரிஷியிடம் சென்று அபராதக்ஷமானம் பண்ணிக் கொண்டு சாபத்தை நீக்க வழியைக் கூறுமாறு பணிந்தான். ''தமோ குணத்தால் செய்த பாவம் ஸாத்விக குணத்தால் போக்கக் கூடியது. ஸாத்விக குணமானது ஸாதுக்களின் சேர்க்கையால் ஏற்படுமாதலால், வேணுவனமாகிய ஸத்திய க்ஷேத்ரமடைந்து நூறு வருஷம் பாம்பின் ரூபத்துடன் வஸித்து அதன் பிறகு அவ்விடத்தில் புரூரவ சக்ரவர்த்திக்காக பகவான் ப்ரத்யக்ஷமாகும் ஸமயத்தில் நீயும் அவருடைய ஸமீபமடைந்து சாபம் நீங்கப் பெறுவாய்'' என்ருர். தக்ஷகனும் ஸர்ப்ப ரூபத்தோடு ஸத்யக்ஷேத்ர மடைந்தான்.

வேதசர்மா என்ற ப்ராமணன், வானப் ப்ரஸ்தாச்ரமத்தையுடையவராய் தன் பத்னியுடன்கூட காட்டில் ஸஞ்சரித்து வருகையில் ஸத்திய க்ஷேத்ரத்தை அடைந்தார். ஸத்திய க்ஷேத்ரத்தையடைந்தவுடன், அவருடைய மனைவி ஒரு புத்ரனைப் பெற்ருள். (வானப்ரஸ்தாச்ரமியான வேத சர்மாவுக்கு புத்ரபாக்யம் ஸத்ய க்ஷேத்ரம் அடைந்தவுடன் ஏற்பட்டதால் இந்த க்ஷேத்ரம் தவப்பயனை எளிதில் கொடுப்பதோடல்லாமல் புத்ர பாக்யத்தையும் கொடுக்கும் என்று கண்டு கொள்வது). பிறகு அவர் சுகமாய் வஸிக்கும் காலத்தில், மிகவும் பசியால் வருந்தின தக்ஷகன், ஆசிரமத்திற்குள் சென்று, தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை விழுங்கினன். இதையறிந்த 'வேதசர்மா' எல்லா ஸர்ப்பங்களைக் கொல்லும் படியான ஹோமம் செய்ய ஒன்று ஆரம்பித்து ஸர்ப்பச் சத்ருவான கருடனை நினைத்துத்தானும் கருடனுகி காரியம் நடத்தினுர், தக்ஷகனும் அக்னி ஜ்வாலி பொறுக்கமாட்டாமல் வேத சர்மாவை அடைந்து பொறுத்தருள வேண்டி, வேதசர்மாவின் குழந்தையை உயிர்ச் சேதமின்றி கக்கினன். இவ்விதம் தக்ஷகன் துர்வாஸ மஹரிஷியால் சபிக்கப்பட்டு பாம்புருவ மடைந்து பிறகு ஸத்திய ரிஷி, வேத சர்மா, புரூரவஸ் சக்ரவர்த்தி இவர்களையுடைய ஸத்யக்ஷேத்ரமடைந்து பகவான் அனுக்கிரகத்தால் முன் போல் விஷ்ணுகிங்கர ரூபமடைந்தான்.

## இந்திரத்யும்னன் கதை

மிக்க தேஜஸையுடைய இந்திரத்யும்னன் மகத தேசங்களுக்கு அரசனுகி திக் விஜயம் செய்ய தென்திசை நோக்கி தமிழ் தேசத்தையடைந்து வெள்ளாற்றின் கரையில் ரதத்தை விட்டிறங்கி நதியில் ஸ்நாநம் செய்து முடித்து கரையேறி தன் ரதம் உள்ள இடத்தை அடைந்து, அங்கு தேரானது காணுமல் போய்விட்டதைக் கண்டான். அப்பொழுது ஒரு வயதான பிராமணர் அரசனையணுகி அந்தக்கிராமம் தன்னுடையது என்றும், தன் வீடு பிரிந்து ஜீர்ணமாகி விட்டபடியால் அதைப் புதுப்பித்துத் தரும்படி வேண்டினுர். இந்தக்கிராமம் உம்முடையது என்று நீர் சொன்னதால் நீரே தேரை மறைத்திருப்பீர் என்று அரசன் சொல்ல, பிராமணரும் ''இவ்விடம் தேவ பூமியாதலால் நீர் தேரோடு வந்ததினுல் அந்தத் தேவதையால் மறைக்கப்பட்டிருக்கும். ஆனுலும் அந்தத் தேவதையை மந்திரத்தால் வசப்படுத்தி உனக்கு தேரைப் பெற்றுத் தருகிறேன்'' என்ருர். வயதான பிராம்மணராக வேஷம் பூண்ட பகவான், ஆகாயத்தை நோக்கி ஜபித்துக் கொண்டிருக்கும் பொழுது, அரசனின் தேர் ஆகாயத்தில் புலப்பட்டது. (தேர் காட்டின இடமாதலால் தேக்காட்டூர் என்ற கிராமமிருக்கிறது). அரசனும் களிப்புற்ற பிராமணரை அணுகி அவருடைய ஜீர்ணமான க்ருஹத்தைத் தெரிவிக்கும்படி வேண்டியருள, ப்ராம்மண வேஷம் பூண்ட பகவானும், ''இங்கிருந்து தெற்கே இரண்டு யோஜனை தொலைவில் உள்ள ஸத்திய கிரி மலையடிவாரத்தில் என் வீடிருக்கிறது.'' என்று சொல்லி மறைந்தார். இந்திரத்யும்னனும் ஸத்தியகிரியடைந்து, அங்குத் தவம் செய்து கொண்டிருக்கும் புருகுத்ஸ ரிஷியைக் கண்டு தனக்கு நேர்ந்த வ்ருத்தாந்தத்தைக் கூறி அதன் உண்மையைத் தெரிவித்தருளும்படி வேண்டினன். ''ஸத்தியகிரிநாதனே ப்ராம்மணக் கிழவராக வந்து, உம்மைக்கொண்டு ஜீர்ணமான கோயிலை புதுப்பித்து உமக்கு நன்மை செய்ய வேண்டும் என்று தம் ரூபத்தைக் காட்டி மறைந்தார்'' என்று புருகுத்ஸ ரிஷி திருவாய் மலர்ந்தருளினுர். அரசனும் சிற்பிகளைக் கொண்டு சாஸ்திர முறைப்படி ஜீர்ணோத்தாரணம் செய்வித்தான். ஸத்தியகிரிநாதனும் அரசனுக்கு இகலோக ஸுகானுபவங்களைக் கொடுத்து, கலங்காப் பெரு நகரம் காட்டினன்.

இவ்விதம் ஸத்திய தேவதை, ஆதி சேஷன், சந்திரன், கருடன், ஸத்திய முனிவர், புரூரவ சக்ரவர்த்தி, தக்ஷகன், கமலநயன ராஜன் ஆகியோர் ஸ்ரீ ஸத்யமூர்த்தியைப் பிரதிஷ்டை ஆராதனங்களினுல் நிலை நிறுத்தினுர்கள்.



# கோள்கள் கூறும் கண்ணன் கதை

தாமரை மேல் அயனவனையும், திசைகளையும், கோள்களையும், யாவற்றையுமே படைத்த எம்பெருமான் தானும் நவகோள்கள் காட்டிய வழியில் நடப்பதாக ஒரு நியதியை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காகக் கீழ்க்கண்டவாறு கிரக அமைப்புக்கள் இருக்கும் போது கண்ணனாக அவதரித்தார். ஜோதிட சாஸ்திர ரீதியில் இந்த கிரக அமைப்புகள் கண்ணன் உலகத்தவருக்கு வாழ்ந்து காட்டிய வாழ்க்கையுடன் எவ்வகையில் பொருந்தும் என்று விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

| | | | |
|---|---|---|---|
| | | லக்னம் சந்திரன் கேது | |
| | ஸ்ரீ: ஸ்ரீ க்ருஷ்ணர் ஜனன ஜாதகம் | | குரு |
| செவ் | | | சூர் |
| | ராகு | சனி சுக்ரன் | புதன் |

1. கண்ணன் பிறந்த போது சந்திரனுக்கு 7-ல் ராகுவும், 5-ல் புதனும் நின்றதால் குடும்பச் சச்சரவு ஏற்பட்டது. லக்னத்திற்கு 3-ல் குரு நின்றதால் அபாயம், வீடு, வீட்டைச் சார்ந்தவர், ஆகிய யாவற்றையுமே இழந்து ஊரை விட்டே வெளியேற நேர்ந்தது. கண்ணனுக்கும் ஏற்பட்டது.

2. லக்னாதிபதியே 6-ம் அதிபதியாகி சத்ருஸ்தானத்தில் சுக்ரனும் ஆட்சியாகி நிற்பதால் கிருஷ்ணனுக்குப் பிறந்த இடத்திலேயே சத்ருக்கள் எற்பட்டனர்.

3. 6-ல் திக்கோள்கள் வலிமை பெற்று நிற்றலாலும், 6-ல் சனி உச்சம் ஆவதாலும், துஷ்டர்க்கு துஷ்டனாகவும், எதிர்த்தார்க்கு வலியனாகவும், பகைவரும் கண்டஞ்சி வணங்கும் தன்மையனாகவும் கண்ணன் இருந்தார்.

4. கிருஷ்ணருக்கு இளைய சகோதர ஸ்தானாதிபதி (அதாவது 3-ம் அதிபதி) சந்திரன் பெண் கிரகம். அவன் உச்சமாகியுள்ளான். எனவே ஒரே ஒரு தங்கை சுபத்ரை இருந்தாள்.

5. 10-ம் இடம் கும்பமாக அமைந்தால் அவன் திருட்டில் ஈடுபட வாய்ப்பு உண்டு. 7-ம் இடம் திருடர், அநீதியைக் குறிக்கும். கண்ணனுக்கு 10 ம் இடம் கும்பம், 7 ல் ராகு உச்சம் அன்றியும் 7 ம் அதிபதி செவ்வாய் 9 ல் உச்சம் எனவே கண்ணன் வெண்ணெத் திருட்டுச் செய்தார். கோபிகைகளின் மனத்தைத் திருடினர். பாரதம் முழுவதும் சூதுவாது நிறைந்தவராகவும் விளங்கினர். ச்யமந்தக மணியைத் திருடியதாக வீணான அபவாதமும் அடைந்தார்.

6. 9-ல் செவ்வாய் விஷவாயுவால் ஏற்படும் கண்டம் அல்லது அபாயத்தைக் குறிப்பான். லக்னத்தில் கேது இருப்பதும் விஷ பயத்தைச் சுட்டும். இதற்குத்தக்கபடி கண்ணன் கொடிய காளியன் என்ற நாகத்தை அடக்கி அதன் தலைகளில் காளியமர்த்தனம் செய்தான். சுதர்சனன் என்ற கந்தர்வன் மலைப்பாம்பாகி நந்தகோபனை விழுங்கியவுடன் கண்ணன் அதனுடன் போரிட்டு அதை வெட்டிச் சாய்த்து தந்தையைக் காப்பாற்றி, கந்தர்வனுக்கு சாப விமோசனம் அளித்தார்.

7. பொதுவாக ஸங்கீதத்தை 5 ம் வீடு குறிக்கும். வாய்ப்பாட்டை (Vocal Music) இரண்டாம் வீடு குறிப்பிடும். ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு இவ்விரண்டிற்கும் உரியவனான புதன் உச்சன். புதன் கலைகட்கு அதிபன் என்பது குறிப்பிடத் தக்கது. வாத்திய இசையை (Instrumental Music) 3 ம் வீடு குறிக்கும். அதற்கு அதிபனான சந்திரனும், அவ்வீட்டில் நிற்கும் குருவும் கிருஷ்ணனுக்கு உச்சம். எனவே குழல் இசையும் வாய்ப்பாடலும் கண்ணபெருமானுக்கு வெகு சரளமாய் கைவந்த கலைகள் ஆயின.

8. 4ல் பாவர் ஆன சூர்யன் அமைவதாலும், 6 ல் சனி அமைவதாலும், சனிக்கு பாக்யாதிபத்யம் (9 ம் வீட்டின் உடைமை) வாய்ப்பதாலும் உறவினர் பகை ஏற்பட்டது. 6 ல் சனி குலப் பகையையும், பகை வெல்லலையும் ஒரு சேரக்குறிப்பிடும். எனவே கண்ணன் தன் குலத்திற்கு தானே பகைவனாக அமைந்தார்.

திரு. பி. சுந்தரராமன், M.A., B.Ed.,
பழமார்னேரி - 613104.

9. 7 ல் ராகு அமர்ந்திருப்பது கண்ணனுக்கு மனைவியர் தவிர பிற பெண்கள் நேசம் இருந்ததைத் தெளிவாகச் சுட்டுகிறது. அன்றியும் பலம்பெற்ற சுக்ரன்+சனி கூட்டாகக் கண்ணபிரான் ஜாதகத்தில் இருப்பதும் பெண்களிடம் மனதைப் பறிகொடுப்பதைச் சுட்டுகிறது. மேலும் 7 ம் பாவாதிபதி 9 ல் இருத்தலாலும் பல பெண்கள் உறவு கிருஷ்ணனுக்கு உண்டு. லக்னாதிபன் சுக்ரன் ஆகி அவன் ஆட்சியடைந்துள்ளதால் பதினாறாயிரம் மனைவியரும், பல்லாயிரக் கணக்கான கோபஸ்திரீகளும் கண்ணனைப் பதியாக அடைந்தனர்.

10. 7 ம் அதிபன் நல்ல இடத்தில் அமர்ந்து குரு பார்வை பெறுதலும், லக்னதிபன் சுக்ரன் பலம் பெற்று இருப்பதும் தான தர்மம் உள்ள மனைவி கண்ணனுக்கு உண்டென்பதை சுட்டுகிறது. ஸ்ரீருக்மிணி, மித்ர விந்தை, காளிந்தீ, பத்ரை, ஸத்யை நப்பின்னை போன்ற கண்ணனின் பட்ட மஹிஷியர் உயர்குடிப் பிறந்த நற்குணங்கள் நிரம்பப் பெற்ற உத்தம ஜாதிப் பெண்டிராவர்.

11. 9 க்கு உரியவன் 6 ஐ அடைய மாமனூர் பொருள் வரும் என்பது விதி. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இவ்வித அமைப்பு இருப்பதால் கண்ணனின் மாமனூரான ஸத்ராஜித்தின் (பாமையின் தந்தை) உடமையான ச்யமந்தக மணி கண்ணனை அடைந்தது.

12. 10 க்கு உடையவன் சுபருடன் கூடவும், இருபக்கங்களிலும் உள்ள வீடுகளில் உள்ளவர் வலுத்திருக்கவும், சிவ பூஜை செய்வான் என்பது விதி. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு 10ம் அதிபன் சனி சுக்ரனுடன் கூடவும், இரு பக்கங்களில் உள்ள ராகு, புதன் உச்சமாகி வலுத்தும் உள்ளனர். எனவே க்ருஷ்ணன் உபமன்யு முனிவரிடம் சிவதீக்ஷை பெற்று சிவனைக் குறித்து இமாலயத்தில் தவம்இருந்து சிவனருளால் தனக்குப் பிறந்த குழந்தைக்கு ஸாம்பன் என்று சிவன் பெயரையே இட்டு மகிழ்ந்ததையும் மஹாபாரதம் கூறுகிறது.

13. 6 ம் இடத்திற்கு 2 ம் இடம் அதாவது 7ம் இடம் மனதைக் குறிக்கும். அதில் ராகு இருப்பதாலும், லக்ன கேது ஆதலாலும், வினையைத் தீர்க்கும் அறிவைக் கண்ணன் பெற்று விதியையும் முறியடித்து வந்தார். கண்ணனை வெல்ல வரம் பெற்ற காலயவனனை முசுகுந்தனிடம் கொண்டு போய் விட்டு, போரில் களைப் படைந்து தூக்கத்தை வரமாகக் கொண்டுத் தன்னைத் தூக்கத்திலிருந்து எழுப்புபவனைத் தன் கண் பார்வையால் பஸ்பமாக ஆக்கும் வர மகிமை பெற்ற முசுகுந்தன் மூலம் இவ்விதம் காலயவனனைப் பிடிசாம்பலாக்கிய கண்ணனின் அறிவு இந்த கிரக அமைப்பால் ஏற்பட்டதேயாகும். குரு புத்ரர்களை யமனிடமிருந்து மீட்டதும், தாயான தேவகிக்கு இறந்த குழந்தைகளைக் காட்டியதும், ஜராஸந்த வதத்தின் போது பீமனுக்குப் புல்லைக் கிழித்து தலைப்புமாற்றிப் போட்டுக் காட்டி அறிவுறுத்தியதும், ஜயத்ரதன் தலையை அர்ஜுனன் கொய்ய உதவியாக சூரியனை சக்ரம் கொண்டு மறைத்து மாலைப் பொழுதை உண்டாக்கியதும், கர்ணன் நாகபாசம்பிரயோகித்ததும், தேரைக் கால் பெருவிரலால் அழுத்தி குறி தவறச் செய்து அர்ஜுனனைக் காப்பாற்றியதும், பரீக்ஷித்தை உத்தரையின் கர்ப்பத்தில் அசுவத்தாமனின் அஸ்திரப் பிரயோகத்திலிருந்து காப்பாற்றியதும், பின்பு பிறந்தவுடன் பரீக்ஷித்தை யாவரும் இறந்தவனாகக் கருதி இருக்கையில், தன் மடியில் கிடத்திக் கொண்டு அம்ருதமயமான திருக்கரங்களால் ஸ்பர்சித்து உயிர் பிழைக்க வைத்ததும், கண்ணனின் விதியைத் தீர்க்கும் அறிவிற்குரிய சான்றுகளாகும்.

14. 6 ல் சுக்ரன் இருந்தால் பேய் வாதை உண்டு என்பது ஜோதிடவிதி. ஸ்ரீகண்ணபிரானுக்கு இவ்விதம்உள்ளதால் கண்ணனிடம் பொறாமையுற்ற காசிதேசத்து அரசன் மகன் ஸுதக்ஷிணன் என்பவன் ஆபிசாரஹோமம் செய்து ஏவிய பைசாசத்தைக் கண்ணன் அழித்தார்.

எனவே மேற்கூறிய காரணங்களால் நவகோள்களும் எம்பெருமானை ஆட்டிப் படைத்து விட்டதாக எண்ணக் கூடாது. நாட்களும், கோள்களும் அவன் காலசக்ரத்தில் அடங்கியிருக்க, தான் கோள்கள் காட்டிய வழியில் நடந்ததாக பகவான் தனக்கே உரித்தான ஒரு வேஷம் போட்டிருக்கிறுன்; அவ்வளவுதான்.

ஸ்ரீகிருஷ்ண ஜாதகத்தில் சந்திரன் குரு, புதன், சனி, ராகு, செவ்வாய் ஆறு கிரகங்கள் உச்சமும், சூர்யன், சுக்ரன் ஆட்சியும் பெற்றிருப்பதோடு, பர்வதயோகம், குருமங்களயோகம், தர்மகர்மாதிபயோகம், புஷ்களகுஞ்சரயோகம், லக்ஷ்மியோகம், யௌவனயோகம் ஆகிய பலவித யோகங்கள் அமைந்திருப்பதால் கிருஷ்ண ஜாதகத்தை பூஜித்து வருபவர்கள் எல்லாவகை இகபர நன்மைகளும் அடைவர். ★

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்,
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

என் ஜான் உடம்பிற்கு சிரசே ப்ரதானம் என்பர். ஆனால் அந்த சிரசிற்கு (தலைக்கு) கண்களே ப்ரதானம் என்று கூறலாம். அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த கண்களை நாம் எவ்வளவு ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமோ அவ்வளவு ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஜாக்ரதையாகப் பாதுகாத்தல் என்றால் தினமும் முகம் கழுவும் நேரங்களில்—குறிப்பாகக்காலைமாலை இருவேளையும் குளிர்ந்த சுத்தமான தண்ணீர் விட்டு கண்களைக் கழுவலாம். அதிகமாக தும்பு, தூசி உள்ள இடங்களின்று கண்களைக் காத்தல் வேண்டும். கண்களுக்கு எரிச்சலூட்டக் கூடிய புகையுள்ள இடங்களில் நீண்ட நேரம் இருக்கக்கூடாது. கண்ணுக்கு அதிகமான - குறிப்பாக-இரவு நேரங்களில் கண் விழித்தல், தொடர்ச்சியான நாட்களில் சினிமா பார்த்தல் போன்றவை கூடாது. மேலும் கண்களுக்கு அதிக ஒளியையும் ஆரோக்யத்தையும் தரும் வகையில் நிறைய காய்கறிகள், கீரைகள், பழங்கள் இவைகளை சாப்பிட்டுக் கண்களைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும்.

இனி கண்களுக்கு வரும் சில வகை வியாதிகளையும், அவைகளுக்குத் தேவையான மருந்துகளைப் பற்றியும் கவனிப்போம்.

கண்களில் வியாதி வருவதற்கு மேலும் சில முக்கிய காரணங்கள் உள்ளன. அவைகள்.: மாதரிடம் மாதவிடாய் சமயத்தில் புணர்ச்சியிலீடுபடுதலாலும், மேக நீராலும், நீண்ட நாட்களாக இருந்து வரும் மலச்சிக்கலாலும், தலை வரட்சியினாலும், எண்ணெய் தேய்த்து தலை முழுகும் பழக்கமுள்ளவர்கள் அவ்வப்போது தவற விடுவதாலும், அதிக விசனத்தாலும், கடும் வெய்யிலில் அதிகமாக அலைவதாலும், அதிக சுமை தூக்குவதாலும், மழையிலும், காற்றிலும் மாறிமாறி அவதிப்படுவதாலும், தாம்பூலம் அடக்கி (புகையிலையுடன் கூடிய) தூங்குவதாலும், ஆழ்ந்த நீண்ட நேர பார்வையாலும் கண்களில் ரோகங்கள் சம்பவிக்கலாம்.

நோய்: வாத காசம் என்று கூறும் கண் வியாதியின் குறிகள் – விழி வீங்கி, தணற்போலெரிந்து நீர் வடியும். தூக்கம் வராது.

மருந்து: நல்லெண்ணெய் 2 படி, நெருஞ்சில் சாறு, முலைப்பால் அல்லது ஆவின்பால் வகைக்கு ½ படி வீதம், இவைகளை ஒன்றாய்க் கலந்து அதில் கல்நார், சிற்றாமுட்டிவேர், கொன்றைபிசின், அதிமதுரம், விளாமிச்சை வேர், வெட்டிவேர், கொத்துமல்லி, சிறுகீரை வேர், செஞ்சந்தனம், கோஷ்டம், ஏலம் வகைக்கு ஒரு பலம் இவைகளை நன்றாய் இடித்து எட்டு படி தண்ணீரில் போட்டு, இரண்டு படி தண்ணீராய் வற்ற வைத்து வடிகட்டியதில் சடாமஞ்சில், சஸ்திரபேதி வகைக்கு ஒரு பலம் பொடித்து ஆவின் நெய்யில் அரைத்து, அரைத்ததை மேற்கூறிய கியாழத்தில் போட்டு அதனுடன் ஒரு படி நெய் கலந்து காய்ச்சி வடித்து தலை முழுகி வர, மேற்கூறிய நோய் தீரும். மேற்கூறிய சரக்கு வகைகள் அதிக அளவில் கூறப்பட்டிருப்பதால், அதன் எடைகளை வகைப்படி குறைத்து கொஞ்சமாக செய்து கொள்ளலாம்.

நோய்: பித்தகாசம் என்று கூறப்படும் வியாதியின் குறிகள்: வெள்ளை விழியில் வெண்மேகம் போல் நீர் படர்ந்து, கரு விழியில்,பாதி உளுந்து அளவில் வெண்மையாய்த்தோன்றும்.

மருந்து: சங்கு, திரிகடுகு, அரிதாரம், அதிமதுரம், புங்கன் வித்து, பீத ரோகிணி, துத்தம், மனோசிலை இவைகளை ஓர் நிரையாய் நந்தியாவட்டப் பூச்சாற்றில் அரைத்து கயிறு செய்து, தேனில் உரைத்து கண்ணிலிட வியாதி போகும். அல்லது சிற்றாமுட்டி, முசு முசுக்கை, குரும்பை, சீந்திற்கொடி, தாமரை வளையம், வகைக்குப் பத்து பலமிடித்து பத்து படி தண்ணீரில் போட்டு, இரண்டுபடி தண்ணீராய் வற்ற வைத்து, வடிகட்டியதில் அதிமதுரம், சண்பகப்பூ, செவ்வியம், கோஷ்டம், மஞ்சிட்டி, ஏலம், லவங்கம் வகைக்கு 3 வராகனிடை ஆவின் பாலில் அரைத்து, மேற்கூறிய கியாழத்தில் கலந்து அத்துடன் ஒரு படி நல்லெண்ணெய் விட்டு கலக்கி பதமாய் காய்ச்சி வடித்து தலை முழுகி வர குணம் தெரியும். இரண்டு முறைகளையும் ஒரே நேரத்தில் செய்யின் வியாதி மிக விரைவாக குறைந்து குணமாகும்.

நோய்: நீரொளி காசத்தின் குணம்: கண்ணில் நீர் கோர்த்து, திரண்டு, கருவிழியின் அடியில் பூப்போல் தோன்றி காணும். அவை தீப்பொறி போல் ஒளிவிடும்.

மருந்து : குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம் சம எடையாய் எலுமிச்சம் பழச் சாற்றிலும், மற்றும் தேனிலும் குழம்பு போலரைத்துக் கொண்டு கண்ணில் போட்டு, ஆனைத்திப்பிலி, அதிமதுரம், தக்கோலம், வெள்ளி லோத்திரம், திரிபலை வகைக்குப் பலம் ஒன்று வீதம் ஆவின் பாலி லரைத்து ஒருபடி நெய்யிற் போட்டு காய்ச்சி வடித்து முழுகியும் வர தீரும்.

நோய் : நீர்ப் பாய்ச்சல் என்னும் வியாதியில் விழி நொந்து அனற் போலெரியும். அருவிபோல் நீர் வடியும், தினவெடுக்கும்.

மருந்து : கையாந்த கரை, கரு வாழைக் கிழங்கு, சம்மந்தி, உத்தம தாளி, தை வேளை, மணித்தக்காளி, நந்தியா வட்டை இவைகளின் சாறு வகைக்கு 1 படி, ஆவின் நெய் அரைப் படி இவைகளைக் கலந்ததில் வெட்டி வேர், விளாமிச்சம் வேர், மஞ்சிட்டி, சந்தணம், குரும்பை, சத குப்பை, சடா மஞ்சில், கார்கோலம், இந்துப்பு, தான்றிகாய் வகைக்கு ½ பலம் அரைத்துப் போட்டு காய்ச்சி வடித்து வாரம் இருமுறை தலை முழுகி வர குணம் தெரியும்.

நோய் : அன்னக் கோபம் அல்லது அனல் கோபம் என்னும் நோயில் கண் நோகும், கண் சிவந்து, கண்ணின் ரப்பைகள் வீங்கி தொட்டால் வலி காணும். மூடி திறக்கும்போது தீப் பொறி பட்டதுபோல் எரியும். நீர் வடியும்.

மருந்து: மாதுளம் பூவும், காயும், பச்சைக் கற்பூரமும் ஓர் நிறையாய் கல்வத்திவிட்டு முலைப்பால் (கிடைக்காவிடில் சுத்தமான பசும்பால்) விட்டு சிதைத்து வெள்ளைத் துணியில் முடிந்து கண்ணிற் பிழிந்து வர நோய் குணம் காணும்.

பசுவின்பால், நல்லெண்ணெய், வகைக்குப் படி வீதங் கலந்து, கோஷ்டம், சண்பகப்பூ, ஏலம், அதி மதுரம், முத்தாக் காசு, விளா மிச்சம் வேர், வெட்டி வேர், சந்தணம் வகைக்கு ½ பலம் இடித்து மேற்கூறிய பால் நல்லெண்ணெய் கலவையில் போட்டு கலக்கி, காய்ச்சி வடித்து தலை முழுகி வர நோய் குணமாகும்.

நோய் : கண் புகைச்சலின் குணமாவது கண் மங்கலாயும், உருவம் சுமாராகத் தோன்றும்.

மருந்து : தலையோடு 1 பலம், துத்தம் ½ பலம், இந்துப்பு ¼ பலம் இவைகளை பனை மட்டைச் சாற்றிலரைத்து கயிறு செய்து, மேற்படி சாற்றிலுரைத்து கண்ணிலிட தீரும். அல்லது எலுமிச்சம் பழச்சாறு 3 துளி, நல்லெண்ணெய் 3 துளி, இலுப்பை அரைப்பு ஊரின தண்ணீர் 3 துளி இம்மூன்றையும் கையில் ஒன்றாய் மத்தித்து கண்ணிற் போட்டு வர தீரும். அல்லது நல்லெண்ணெய் ஒருபடி, மிளகு, அதிமதுரம் வகைக்கு ½ பலம் இவைகளை ஆவின் பாலில் நன்றாய் அரைத்து எண்ணெய்யில் போட்டுக் காய்ச்சி வடித்து தலை முழுகி வர நோய் தீரும்.

நோய் : மாலைக் கண்-இதன் குணம் மாலை நேரத்தில் மட்டும் இருட்டியது போல் தோன்றும். சிலருக்கு மாலையில் சூரிய அஸ்தமனமானது முதல் கண் பார்வை குறைந்து இருள் கவ்வியது போல் தோன்றும்.

மருந்து : புளியம் பூ, கிராம்பு, வெள்ளைக் காக்கணும் வேர்-அதன்பூ, துருசு, நீல ரத்தினம், முத்து, பவளம் இவைகளை சமமாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து கயிறு செய்து மேற்படி சாற்றிலுரைத்து கண்ணில் தீட்ட மாறும். அல்லது மருதம்பட்டை, நற்சீரகம், ஈருள்ளி இவைகளை சிதைத்து வெள்ளைத் துணியில் முடிந்து கண்களில் பிழிய தீரும். இலுப்பைப் பூ, மகிழம்வித்து, காட்டா மணக்கின் முத்து இவைகளில் ஏதாவது ஒன்றை வியாதியற்றவளின் முலைப்பாலில் உரைத்துப் போட தீரும்.

(குறிப்பு: திரிகடு என்பது சுக்கு, மிளகு, திப்பிலி இம்மூன்றும் கலந்ததாகும்.

திரிபலா என்பது கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் இம் மூன்றும் கலந்ததாகும்.



# தங்கம், வெள்ளி பல்லிகள்

திரு. சாயிபிரகாஷ் - சென்னை-95.

முன்னொரு காலத்தில் அசுவந்த மகாராஜா என்பவருக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்கள் தூர்வாச முனிவரிடம் சகல கலைகளையும் அறிந்து கொள்ளச் சென்றார்கள். ஒருநாள் அவர்களிடம் முனிவர் பூஜைக்கு நீர் கொண்டு வரும்படி கூறினர். இவர்கள் சிறுவர்கள் ஆதலால், நீர் கொண்டு வரும் பொழுது நீரை மரத்தினடியில் வைத்துவிட்டு விளையாடச் சென்றனர். அப்பொழுது மரத்திலிருந்த ஒரு பல்லி அந்நீரில் விழுந்து விட்டது. அதை அறியாதச் சிறுவர்கள் அந்நீரைக் கொண்டு சென்ற பொழுது அதில் பல்லி இருப்பதை முனிவர் கண்டார். பூஜைக்கு குறித்த நேரத்தில் வராததாலும் நீரில் பல்லி இருந்தாலும் முனிவர் அவர்கள் இருவரையும் பல்லியாகும்படிச் சாபமிட்டார். அவர்கள் பயந்து நடுங்கிச் சாபப் பரிகாரம் என்னவென்று வேண்ட, முனிவர், "காஞ்சியிலுள்ள அத்திகிரியின் மேல் வரத ராஜப் பெருமாள் எழுந்தருளி இருக்கின்றார். அங்குள்ள புஷ்கரணியில் நீராடி அவரைத் தரிசித்தால் உங்களுக்குச் சாப விமோசனம் கிடைக்கும்" என்று கூறினர். அவர்களும் தூர்வாச முனிவரின் கூற்றுப்படியே வரதராஜப் பெருமாளை வணங்கி பாப விமோசனம் பெற்றனர்.

தங்க, வெள்ளி பல்லிகளாக மாறிய அவர்களைத் தொடுவதால் இவ்வுலகில் பல்லி நம்மீது விழுவதால் ஏற்படும் தோஷங்கள் அனைத்தும் நீங்கும்.

